# கல்கி

குடும்பத்துடன் களிக்க...

KALKI
19.3.2006 ரூ.8.00
80 பக்கங்கள்



## ரிலாக்ஸ் சிவாஜி!



## சாகஸம் ஆயிரம்!



## "எனக்காக பிரார்த்தனை பண்ணுங்க!"




# Vivekananda Vidya Kala Ashram

(Affiliated to Central Board of Secondary Education, Delhi)
"M.S. Jain Gyana Vihar" Puliyur Village, Sivanvoil P.O,
Thiruvallur District, Tamilnadu. Pin : 602 024
Phone :044 - 27624650 & 55255868, 94440-33935
www.vvka.org. email: vvka@vesonline.org

## An ideal residental school near Chennai for Boys

*Located in a 25 acre farm in serene rural surroundings with pollution free air and plenty of water.*




*Experienced and dedicated teachers residing in the campus impart value - oriented education, rooted in Bharatiya tradition and culture. Instructional programme includes prayer, yoga, drill, games, marshal arts, instrumental music, swimming and vedic recitation, agnihotram besides academic classes aligned to CBSE with choice of Hindi/Tamil as second language.*



*Fully equipped dormitory type hostel accommodation with wholesome vegetarian food and fresh milk from Goshala in the campus. Spacious classrooms, well equipped laboratory and library.*

*School is promoted by* ***Vivekananda Educational Society*** *which has over 30 years of experience in establishing and running many reputed schools in and around Chennai city.*



*Admissions open to classes VI, VII, VIII and IX for the session commencing from June 2006. Applications should be made before 30TH April 2006. Prospectus and application forms may be obtained from* ***Vivekananda Educational Society****, "Sri Paduka" Krishna Apartments, H-Block, 1053 Poonamallee High Road, Chennai 600 084.*

*Phone (44) 23452120 & 23452121.*

***Application form / Prospectus can be downloaded from www.vvka.org also.***

கிட்டத்தட்ட 'வாலி' படத்தோட கதைதான். மச்சினிச்சிக்கு அக்கா புருஷன் மேல காதல் வருது. எப்படியாவது அடையத் துடிக்கிறாங்க. ஆனா நம்ம ஹீரோ ஒரு ஸ்ரீராமர் அவதாரம். மச்சினிச்சி வலையில் விழாம அவளுக்கு வேறொரு நல்ல வாழ்க்கையை அமைச்சுத் தர முயற்சிக்கிறார். க்ளைமாக்ஸ் சுபம் அல்ல சோகம்.

இயக்குனர் இகோரோட கதாபாத்திர தேர்வுகள் பளிச். குறிப்பா ரேணுகாமேனனோட தங்கையா வந்து படத்தையே தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர்ற அக்ஷயா நல்ல தேர்வு. வில்லத்தனமான கண்களாலேயே ஆர்யா மீதான தன் காதலைத் துல்லியமா காட்டிடறாங்க. படத்தலைப்புல மட்டுமில்லாம கதாபாத்திரங்களுக்கும் அகிலன், அன்பரசி, கண்மணின்னு அழகான தமிழ்ப் பெயர்கள் சூட்டப்பட்டிருக்கு.

கலாசாரத்துக்கு எதிரான இந்தக் கதையை ஆபாசமில்லாம எடுத்ததுதான் படத்தைத் தொடர்ந்து பார்க்க வைக்குது. தன் தங்கையோட கள்ளத்தனத்தை புரிஞ்சுக்காம ரேணுகாமேனன் ஆர்யாகிட்ட தன் தங்கையை ஷாப்பிங் அழைச்சுட்டு போகச் சொல்றது பரிதாபத்தை வரவழைக்குது.

ஆர்யா மாதிரியான இளம் ஹீரோ ஒரு குழந்தைக்கு அப்பாவா இப்படியொரு கதையில் நடிச்சதுக்குப் பாராட்டலாம். டயலாக் டெலிவரியில இன்னும் கூடுதல் கவனம் செலுத்தணும்.

படத்தோட பெரிய பலவீனம் இசை. எல்லாப் பாடல்களுக்கும் ரசிகர்கள் தவறாம கேன்டீன் பக்கம் போய்டறாங்க. ஆர்யாவோட ரசனையான வீடு கலை இயக்குனரைப் பாராட்டச் சொல்லுது. "மாமா, நான் இனி உங்க கண்மணியில்லையா மாமா"ங்கிற வசனத்திலேயே படத்தோட முடிவைச் சொல்லிடறாரு வசனகர்த்தா பாலகுமாரன். வீட்டுக்குள்ளேயே காட்சிகள் நிறைய இருந்தாலும் ஒளிப்பதிவு அதைச் சரிகட்டிடுது. ஊஞ்சல் காட்சிகள் அழகு.

ஆர்யாவே தன்னை பாழுங்கிணத்துல தள்ளினதைப் பொறுக்க முடியாம அக்ஷயா எடுக்கிற முடிவும் ஆர்யா தன் தவறை உணர்வதுபோல படத்தை முடிச்சதும் உருக்கமா இருக்கு. இகோர்கிட்டயிருந்து தொடர்ந்து நல்ல படங்களை எதிர்பார்க்கலாம் போல.

- லஜ்ஜாவதி



# வட்டமேஜை

தமிழக காங்கிரஸின் தலைவர் கிருஷ்ணசாமியின் கூற்று வரவேற்கத் தக்கது.
பள்ளப்பட்டி, த.அசாருதீன்

சத்யராஜுக்கு பெண் இருப்பதே பலருக்கும் தெரியாது. 'கல்கி' ஒரு சுறுசுறுப்புத் திலகம்!
சிதம்பரம், ஸ்ரீவித்யாகாளிதாஸ்



# சுறுசுறுப்புத் திலகம்!

யாரை எடைபோட்டாலும் தமிழக வாக்காளர்களை எடைபோட முடியாதென்று கூறி தமிழக வாக்காளர்களை எடைபோட்ட தராசுவுக்கு சபாஷ்!
வேலூர், கே.கஸ்தூரி கதிர்வேல்

'உருகும் இதயம்' கதை மனதை நெகிழச் செய்தது.
மேற்கு மாம்பலம், ஆர்.ராஜேஸ்வரி

'அடுத்த முதல்வர் யார்?' என்று வெட்டு ஒன்று துண்டு ரெண்டாய் சொல்வாரெனப் பார்த்தால், ஜோதிடர் தலைமுடியைப் பிய்த்துக்கொள்ள வைத்துவிட்டாரே!
கோவை - 1, டி.ஜெய்சிங்

வைகோவின் ஸ்திரமற்ற நிலையையும், அதனால் மக்களுக்கு ஏற்படும் அபாயநிலையையும் தலையங்கம் தெளிவாகவே தோலுரித்துக் காட்டியிருந்தது.
மேலகிருஷ்ணன் புதூர், ஆர்.கே.லிங்கேசன்

ஆட்சி அதிகாரத்தைப் பற்றி கவலை வரும்போது, கஜானா ஆட்டங்கண்டு விடுமோ என்றுதானா கவலைப்படப் போகிறார்கள்!
உசிலம்பட்டி, எஸ். கருணையானந்தம்

உருக்கு உலையில் தொடங்கி அணு உலை வரை வடிவமைத்த கே.ஆர்.ஆர். நிறுவனத்தின் முயற்சி பாராட்டுக்குரியது.
சேலையூர், கே.பி.ராமன்

ஜெயந்தி சங்கரின், 'அப்பாவின் மனைவி' சிறுகதை அற்புதமான படைப்பு.
திருவண்ணாமலை, என்.சண்முகம்

அமரர் கல்கியின் 'ஆறாவது குழந்தை' படிப்பதற்கு நகைச்சுவையாக இருந்தாலும் சிந்திக்க வைத்த கட்டுரை.
சென்னை-17, ஆர்.விஜயலக்ஷ்மி

அழகாக புகைப்படத்துக்கு

**பக்கம் 44-ல் வெளியாகியுள்ள**
**சுஜாதா படம் : ஸ்ரீஹரி**

சிரிப்பதில் மட்டுமல்ல, பேட்டி கொடுப்பதிலும் தேறிவிட்டார் ஸ்ரீகாந்த்!
சென்னை, எஸ்.ஆர்.ஹரிஹரன்,

ராஜேஷ் பரேக்கின் காஷ்மீர் புகைப் படங்கள் பிரமாதம்!
வயலூர், இராம. பார்த்திபன்

ஸ்ரீ ஸ்ரீ ரவிசங்கர் அவர்களின் வெள்ளிவிழா பற்றிய விவரங்களை ரத்தினச் சுருக்கமாக வெளியிட்டிருந்தது பாராட்டுக்குரியது.
வேளச்சேரி,
கோவர்த்தனன்

ஆலந்தூர் தொகுதி விசிட் அனல்தான்!
சென்னை, ஜி

அருள்வாக்குடன், வாரியார் அமுதம் கிடைத்தது.. பாலுடன் பழம் கிடைத்தது போல் இருந்தது.
சென்னை-40,
நா.பாலசுப்பிரமணியன்

'ரங் தே பஸந்தி' பட விமர்சனம் அற்புதம்!
அயன்புரம், த.சத்தியநாராயணன்

காங்கிரஸ் கட்சியில் கோஷ்டிகள் இல்லை என்ற கேள்விக்கு பருத்திக் கொட்டை - புது மாப்பிள்ளை கதையை ஒப்பிட்டு காங்கிரஸ் தொண்டர்களின் வயிற்றெரிச்சலை ஏன் கிளப்புகிறீர் தராசு?
சென்னை - 63, வி.சீனிவாசன்

ஸ்பீட் போஸ்ட்!




**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**ஆர்.சி. ஜெயந்தன்**
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

**ஒவ்வொரு இதழும் உங்கள் சேமிப்புக்கு**

• ஷ்ரேயா



“அப்பாடா! தேர்தல் அறிவிப்பு வந்தாச்சு! இனிமே பத்திரிகைகாரங்களுக்கு எலெக்‌ஷன் நியூஸ்லதான் இண்ட்ரஸ்ட்! நம்மளைக் கொஞ்ச நாளைக்கு மறந்திடுவாங்க!” இப்படிச் சொன்னவர் ரஜினிகாந்த். சொன்னது ஏவி.எம். சரவணனிடம்.

ஏவி.எம். ஸ்டுடியோவுக்குள்ளே திடீரென்று ஒரு சர்ச்சும், இசைக் கருவிகள் கடையும் முளைத்தன. ‘ராயல் மியூஸிகல்’ என்ற பெயர் கொண்ட கடையில் எல்லாவிதமான இசைக் கருவிகளும் இருக்கும். முக்கால்வாசி டம்மி. கால்வாசிதான் நிஜம். இங்கேதான் கடந்த வாரத்தில் ரஜினியின் ‘சிவாஜி’ படத்தின் ஃபைட்டிங்... ஸாரி ஷூட்டிங். இந்தக் கடையில் சண்டை நடப்பதாக காட்சியை அமைத்திருக்கிறார் இயக்குனர் ஷங்கர். இங்கே சண்டை ஆரம்பித்து, அடுத்த கட்டமாக

இசைக் கருவிகள் ஏராளமாக வைக்கப்பட்டிருக்கும் கோடோனுக்குள் தொடர்கிறது. கோடோன் செட்டை ஏவி.எம்.மிலேயே வேறு ஒரு ப்ளோரில் போட்டிருந்தார் தோட்டாதரணி. இசைக் கருவிகளில் நிஜம் எது, டம்மி எது என்று கண்டுபிடிக்க முடியாத

அளவுக்குத் தத்ரூபமாய் உருவாக்கப்பட்டிருந்த இசைக் கருவிகளைப் பார்த்து, சண்டைக்காட்சியில் நடித்தவர்கள் பிரமித்துப் போனார்கள்.

இந்த சண்டைக் காட்சி ஷெட்யூலின் கடைசி நாளன்று, ''என்ன! ரொம்பவும் ரிலாக்ஸ்டாக இருக்கிறீர்கள் போலிருக்கிறதே!'' என்று சரவணன் கேட்க, அதற்கு ரஜினி சொன்ன பதில்தான் ஆரம்பத்தில் குறிப்பிடப்பட்டுள்ள வரிகள்.

ஏவி.எம். தரப்பில், எந்தப் பிரச்னையென்றாலும், அதனை மிகவும் டிப்ளமேட்டிக்காக கையாளுகிறார்கள். படத்தின் முதல்கட்டப் படப்பிடிப்பு ஹைதராபாத்தில் ராமோஜிராவ் ஃபிலிம் சிட்டியில் நடைபெற்றது. ஏவி.எம். ஸ்டுடியோவில் படம் பிடிக்காமல், ஹைதராபாத் போனதன் காரணம் என்ன தெரியுமா?

ஷங்கர், தான் எடுக்கவிருந்த பாடல் காட்சிக்கு நாலுமாடி கட்டிட செட் வேண்டும் என்று கேட்டதுதான். நாலு மாடி உயரத்துக்கு செட போட, ஏவி.எம்.மில் வசதி இல்லை. எனவே, ராமோஜி ஃபிலிம் சிட்டிக்குப் போனார்கள். கலைநயம் மிகுந்த, பால்கனிகளுடன் கூடிய நாலு மாடி செட்டை சுற்றிச் சுற்றிப் பார்த்து ரசித்து, ஷங்கரை ரொம்பவே பாராட்டினாராம் ரஜினி.

ஏவி.எம். தரப்பிலிருந்து, 'ராமோஜி ஃபிலிம் சிட்டி நிர்வாகிகளுக்கு ஒரு கண்டிஷன் போடப்பட்டது. 'எங்கள் ஷூட்டிங் முடிந்த மறுநாளே, அந்த செட்டை முழுமையாகப் பிரித்துவிட வேண்டும். வேறு யாருக்கும் அதில் படப்பிடிப்பு நடத்த அனுமதி தரக்கூடாது'. கண்டிஷனுக்கு ஒப்புக் கொண்டாலும், சிவாஜி படப்பிடிப்பு முடிந்தவுடன் அந்த செட் கலைக்கப்படவில்லை.

காரணம்?

ராமோஜி ராவ், "இன்னும் சில தினங்களில் எங்கள் நிர்வாகக்குழு கூட்டம் நடைபெறவிருக்கிறது. எங்கள் ஃபிலிம் சிட்டியில் போடப்பட்டதிலேயே மிகப் பிரம்மாண்டமான செட் இதுதான் என்பதால், அவர்கள் எல்லாம் இந்த செட்டை ஒருதடவை பார்க்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன்" என்று கேட்டுக்கொண்டார். அதன்படி, ராமோஜி ஃபிலிம் சிட்டியின் நிர்வாகக்குழு இயக்குனர்கள் அனைவரும் சிவாஜி பட செட்டைப் பார்த்து, பிரமித்து பாராட்டித் தள்ளிவிட்டார்களாம்.

ராமோஜி ஃபிலிம் சிட்டிக்குள் ஷூட்டிங் என்றால், லைட்மேன் உதவியாளர் முதல் அனைத்துத் தொழிலாளர்களும் ஃபிலிம்சிட்டி ஊழியர்கள்தான். வெளியிலிருந்து எந்தத் தொழிலாளரும் அங்கு பணியாற்ற வாய்ப்புக் கிடைக்காது என்பதால், இங்கே லைட்மேன்கள் சங்கத்தில் சிறு சலசலப்பு. அவர்கள் பெப்சி விஜயனிடம் புகார் மனு தர, விஷயத்தைக் கேள்விப்பட்ட

# ரிலாக்ஸ் சிவாஜி!



ஏவி.எம். சரவணன், விஜயனை நேரில் வரவழைத்துப் பேசினார்.

"சொந்தத்தில் ஸ்டூடியோ வைத்துக் கொண்டு, ஹைதராபாத்தில் மொத்தப் படத்தையும் நாங்கள் எடுப்போமா? இங்கே எடுக்க முடியாத காட்சிகளை எடுக்கத்தான் ஹைதராபாத் போனோம். பெரும்பாலான படம் எங்கள் ஸ்டூடியோவிலும், சென்னை நகரத்திலும்தான் எடுக்கப்படவுள்ளது" என்று சொன்னபோது, விஜயன் அதை ஏற்றுக் கொண்டாராம்.

ஆசியாவிலேயே மிகப் பிரம்மாண்டமான படப்பிடிப்புத் தளம், ராமோஜி ஃபிலிம் சிட்டியில்தான் உள்ளது. 23 ஆயிரம் சதுர அடி பரப்பளவு கொண்ட செட் அது. அங்கே செட் போட்டு, இன்னும் ஒரு பாடல் காட்சியைப் படம் பிடிக்கப் போகிறார் ஷங்கர். இது தவிர ஃபாரின் போய், ஒரு பாடலை எடுக்கப் போகிறார்கள்.

"மீடியாக்கள் மத்தியில், சிவாஜி பற்றி ஏதாவது 'ஸ்கூப்' நியூஸ் தர வேண்டும் என்கிற எண்ணம் காரணமாக ஏகப்பட்ட கற்பனையில் உருவான தகவல்கள். அவற்றால் தயாரிப்பாளர் தரப்புக்கு ஏற்பட்ட தர்மசங்கடங்கள் நிறையவே வாம்.

'இரண்டு கதாநாயகிகள் கதை. இன்னொரு ஹீரோயின் ஷங்கரின் ஹிந்தி 'முதல்வன்' பட ஹீரோயின் ராணி முகர்ஜி' என்று ஒரு பத்திரிகையில் எழுதி விட, "ஏன் சார், ரெண்டு ஹீரோயின் கதையாமே! என்னிடம் அப்படி நீங்கள் சொல்லவே இல்லையே!" என்று படத்தின் ஒரே ஹீரோயினான ஷ்ரேயா புலம்ப, 'வதந்திகளை நம்பாதீர்கள்' என்று அவருக்கு ஆலோசனை தரப்பட்டிருக்கிறது.

படத்தைப் பற்றித் தவறான தகவல் எழுதிய இன்னொரு பிரபல பத்திரிகை நிருபரின் வேலை போய்விடுமோ என்கிற க்ளைமாக்ஸ் வரை போய், கடைசியில் மன்னிப்புக் கேட்டு வேலையைக் காப்பாற்றிக் கொண்டது தனிக்கதை.

அதனால்தான் ரஜினி சொன்னார், "அப்பாடா! தேர்தல் அறிவிப்பு வந்தாச்சு!"

**- மௌலி**

சின்ன ஜோக்: பெரிய பரிசு!

# போட்டி முடிவு-8

தேர்தல் தேதி அறிவிச்சப்பகூட இவ்ளோ பரபரப்பு இருந்திருக்காது... தேர்தல் ஜோக்ஸ் கேட்டவுடனே எழுதி மலைக்க வச்சுட்டீங்க! சிறந்த எலெக்ஷன் ஜோக் எழுதி சென்னை சௌம்யா மேட்ரிமோனியல் சென்டர் வழங்கும் பிரஷர் குக்கர் பரிசாகப் பெறும் வாசகர், என். பாலகிருஷ்ணன், மதுரை.



''வர்ற சட்டசபை எலெக்ஷன்ல நீங்க ஆளும்கட்சியோட கூட்டணி வச்சுக்கப் போறீங்களா, இல்ல எதிர்கட்சி யோடவா?''

''எங்க கட்சியில இருக்கிற 37 கோஷ்டிகள்ல 14 கோஷ்டிகள் ஆளுங்கட்சியோடும், 17 கோஷ்டிகள் எதிர்கட்சியோடும், மீதி 6 கோஷ்டிகள் தனியாகவும் நிற்கிறதா ஏகமனதா முடிவு பண்ணியிருக்கோம்!''

## சிப்பாய் கலகத்தில்

## பிரகுரத்துக்குத் தேர்வானவை...

''இந்தத் தேர்தல்லே தலைவர் புதிய வரலாறு படைக்கப் போறாராம்...''

''சரி... அதுக்காக 'சிப்பாய் கலகத்தில் சிம்ரன் ஈடுபட்டார்'னும் 'ஆஷ் துரையை அஸின் சுட்டுக் கொன்றார்'னும் சொல்றது நல்லாயில்லை...!''

- தஞ்சை தாமு

''விட்டுக் கொடுக்கும் ஒவ்வொரு தொகுதிக்கும் சமமாக தேர்தல் நிதி வழங்கப்படும்னு கூட்டணித் தலைவர் சொன்னதுக்கு, நம்ம கட்சித் தலைவர் என்ன சொன்னார்?''

''எல்லாத் தொகுதிகளையுமே விட்டுக் கொடுக்கிறேன்னு சொல்லிட்டார்.''

- து. அருண்குமார்

''ரொம்ப நேரமா அங்க என்ன பண்றீங்க.... வோட்டுப் போட்டுட்டு சீக்கிரம் வாங்க...''

''அட ஏன் சார் சலிச்சுக்கிறீங்க... காலைல இருந்து வோட்டுப் போட்டிட்டிருக்கற எனக்கே அலுக்கல!''

- சத்யா

''அங்கே என்ன கலாட்டா?''

''அந்த வாக்காளருக்கு '8' ராசி எண் இல்லையாம். நாளைக்கு வந்து வோட்டுப் போடலாமான்னு கேட்கிறாராம்...!''

- லெ.நா. சிவகுமார்



"இருபத்து மூன்று வருஷங்கள்; அறுபத்தைந்து படங்கள்; திகட்டும் அளவுக்குக் கிடைத்துவிட்டன பேரும் புகழும். போதும். இனிமேலாவது ரெகுலர் சினிமாவிலிருந்து விடைபெறுகிறேன்" என்று அறிவித்திருக்கிறார் பிரபல இயக்குநர் பிரியதர்ஷன்.

# "போதும் கமர்ஷியல் சினிமா!"

"மற்றவர்களின் விருப்பத்துக்கேற்ப மசாலா படங்களை இயக்கியது போதும். இனிமேல் கலைப்படங்கள்தான் எனது இலக்கு. 'கேன்ஸ்' சர்வதேச பட விழாவுக்குத் தேர்வு பெறும் வகையில் இனி என் படங்கள் அமையும். அதன் முதற்கட்டமாக காஞ்சிபுரம் நெசவாளர்களின் வாழ்க்கையைப் பதிவு செய்ய உள்ளேன். அதன் படப்பிடிப்பை இரு பருவங்களில் எடுக்க இருப்பதால் முடிக்கச் சிறிது காலம் ஆகும். தொடர்ந்து மருத்துவமனைகளின் அவலநிலை பற்றியும் எய்ட்ஸ் விழிப்புணர்வு பற்றியும் படங்கள் எடுக்க உள்ளேன்" என்கிறார்.

இவர் கடைசியாகத் தமிழில் இயக்கிய படம் 'லேசா லேசா'. "எனக்கும் தமிழ்ப் படங்களுக்கும் ஒத்துப் போவதேயில்லை. எப்படிப் படம் கொடுத்தாலும் அது தோல்வியடைகிறது. அதனால்தான் ஒதுங்கிவிட்டேன். ஆனால் பாலிவுட் என்னைக் கைகூப்பி வரவேற்றுள்ளது. அங்கு ஜெயித்த முதல் தென்னிந்திய இயக்குனராக நான் போற்றப்படுகிறேன்."



தமிழ்ப் படங்கள் பற்றி?

"தொழில்நுட்பத்தில் அசத்துகின்றன. ஹிந்தியில் தமிழர்களின் ஆதிக்கம்தான். ஆனால் தமிழ்ப் படங்களில் வலுவான கதைகள் கிடையாது. சேரனைத் தவிர வேறெந்த இளம் இயக்குனரும் என்னை ஆட்கொள்ளவில்லை" என்கிறார்.

இவர் இயக்கியுள்ள இரு ஹிந்திப் படங்கள் அடுத்தடுத்து வெளிவர உள்ளன. ஒருவேளை அந்தப் படங்கள் ஜெயித்து விட்டால்?

"நிச்சயம் என் முடிவிலிருந்து பின்வாங்க மாட்டேன். ஓய்வு எல்லோருக்கும் உண்டல்லவா? கலைப் படங்கள் வழியாக என் திறமையை மேலும் அழுத்தமாக நிரூபித்து, சர்வதேச திரைப்பட விழாக்களில் இந்திய திரையுலகுக்குப் பெருமை தேடித் தரப் போகிறேன்" என்கிறார்.

**- செந்தில்**




நன்றி! நன்றி! நன்றி!

ராஜீவ் காந்தி தேசிய தர விருது 2006

# சிறந்த தரமான தயாரிப்புகளுக்காக இந்திய தரக் கட்டுப்பாடு நிறுவனம் வழங்கும்

## 2005-ஆம் ஆண்டுக்கான

## ராஜீவ் காந்தி தேசிய தர விருதினை

மத்திய வேளாண் துறை அமைச்சர் **மாண்புமிகு சரத்பவார்** அவர்களிடம் 21.02.2006 அன்று புது டில்லியில் நடைபெற்ற நிகழ்ச்சியில் பெற்றதில் **சக்தி மசாலா நிறுவனம்** பெருமிதம் கொள்கிறது.

இவ்விருது பெற்ற எங்கள் நிறுவனத்திற்கு எங்களின்பால் அன்பு கொண்டு பல்வேறு வகையிலும் எங்களை வாழ்த்தி ஊக்குவித்துக் கொண்டிருக்கும் அனைத்து நல் இதயங்களுக்கும், கடந்த 30 ஆண்டு காலமாக தொடர்ந்து எங்களுக்கு பேராதரவு வழங்கி வரும் லட்சோப லட்சம் இல்லத்தரசிகள், எங்களின் மேலான வாடிக்கையாளர்கள், விற்பனையாளர்கள், விற்பனைப் பிரதிநிதிகள், இரவு பகல் அயராது பணிபுரியும் எங்கள் அனைத்து பணியாளர்கள், நண்பர்கள், நலம் விரும்பிகள், உற்றார் உறவினர்கள், நிறுவனத்தின் நலனை கண்ணும் கருத்துமாய் காத்து வரும் வழக்குரைஞர்கள், கணக்காயர்கள், வங்கியாளர்கள், எங்கள் நல்ல முயற்சிகளுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வரும் தொலைக்காட்சி, பத்திரிகைத் துறை நண்பர்கள், வர்த்தக சங்கங்கள், அரசுத் துறை அதிகாரிகள் மற்றும் அனைத்து நல் உள்ளங்களுக்கும் எங்கள் இதயம் கனிந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஊனமுற்றோருக்கு வேலை வாய்ப்பு மற்றும் பயிற்சியளித்தல், பூமியை பசுமையாக்கும் முயற்சியில் மரக்கன்றுகள் நட்டுப் பராமரிப்பு மற்றும் மழை நீர் சேமிப்பு திட்டங்கள் - இதுபற்றிய விழிப்புணர்வினை மக்களிடையே உருவாக்குவது, தரமான பொருட்களை உற்பத்தி செய்வது, நேர்மையான வணிக நெறிமுறைகள், வாடிக்கையாளர் நலன் காப்பது மற்றும் தேசிய நலன் போன்றவற்றில் தொடர்ந்து எங்களை அர்ப்பணித்துக் கொள்வோம் என்பதை மிகப் பணிவோடு தெரிவித்துக் கொள்கின்றோம்.




அன்புடன்,

**பி.சி. துரைசாமி - சாந்தி துரைசாமி**

சக்தி மசாலா நிறுவனங்கள்,
ISO 9001 : 2000 & HACCP தரச்சான்றிதழ் பெற்ற நிறுவனம்
6, மாமரத்துப் பாளையம், ஈரோடு - 638 004
E-mail : sakthimasala@vsnl.com Website : www.sakthimasala.com

# அம்மாவின் க்ரீன் சிக்னல்!

கூட்டணிக் கட்சிகளுக்கு ஒதுக்கப்படும் தொகுதிகளில், அதிருப்தியில் இருக்கும் திராவிடக் கட்சிப் பிரமுகர்களை தங்கள் வசம் இழுக்கும் முயற்சியில் ஈடுபடுமாறு திருநாவுக்கரசருக்கு அன்புக் கட்டளை இட்டுள்ளதாம் பா.ஜ.க. தலைமை.



ஏற்கெனவே அம்மா கட்சியில் நட்சத்திரங்களுக்குப் பஞ்சமில்லை. இதில் விஜயசாந்தி வேறு 'அ.தி.மு.க.வுக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்வேன்... அது எனது கடமை' என்று சென்டிமெண்டலாக அடம் பிடிக்கிறாராம். அம்மாவும் க்ரீன் சிக்னல் காட்டிவிட்டாராம்.



எழும்பூரில் பரிதியை எதிர்த்துக் களமிறங்கவிருக்கும் திருமாவளவனுக்கு அம்மா கொடுத்திருக்கும் முதல் அசைன்மெண்ட், 'பா.ம.க. போட்டியிடும் தொகுதிகளில் அதிக நாள் பிரசாரம் செய்து நெருக்கடி கொடுக்க வேண்டும்' என்பதுதான். இதற்கு 'தேவர் வாக்கு வங்கி இருக்கும் பகுதிகளுக்கு நீங்கள் பிரசாரம் செய்யச் செல்ல வேண்டாம்' என்பது மறைமுக அர்த்தமாம்.

தற்போதைய அரசியல் மாற்றங்களுக்கு முன் அதிமுகவுக்கு ஆதரவு தெரிவித்து தீர்மானம் நிறைவேற்றிய உதிரிகளைக் 'கவனித்து'க் கொள்ளும் பொறுப்பு ஓ.பி.எஸ். மற்றும் செங்கோட்டையனுக்குத் தரப்பட்டுள்ளதாம்.



ம.தி.மு.க. போட்டியிடும் தொகுதிகளுக்கென்று சிறப்பு போஸ்டர்கள் தயாராகி வருகின்றன. தயாரிப்பவர்கள் ம.தி.மு.க.வினர் அல்ல. தி.மு.க.வினர்தான். குறிப்பாக வைகோ, நடைபயணம் மற்றும் பொடா சிறைவாசத்தின்போது கூறிய வாசகங்கள் அதில் இடம்பெற்றுள்ளனவாம். வைகோவின் சந்தர்ப்பவாதத்தை மக்களிடம் வெளிப்படுத்தவே இந்த ஏற்பாடாம்.

- கலை



# IT டேட்டா

## சுட்டி குட்டி!

கையடக்கக் கணினி முயற்சி எதுவும் சரியாக வெற்றி பெறாத நிலையில் குட்டியூண்டு கணினியோடு களமிறங்கியுள்ளது மைக்ரோசாஃப்ட். செல்போன் அளவுதான் உள்ள இந்தக் கணினியின் பெயர் ஓரிகமி (Origami). இதனை நெட்வொர்க்கில் இணைக்கலாம். இணையத்தில் உலவ பயன்படுத்தலாம். பேட்டரியில் இயங்கக் கூடியது. இதன்மூலம் டௌன்லோட் செய்யலாம். தொலை பேசலாம். இசை, படம், புகைப்படம் என ஒரு கணினியில் உள்ள சகல வசதிகளும் இந்தச் சுட்டியில் உண்டு.

## உலகத்தின் முதல்...

தற்போது பாலிவுட் படங்களை இணையம் வழியே வழங்கத் தொடங்கியுள்ளது www.ultraindia.com. இந்தியாவின் முதல் மூவி போர்ட்டல், உலகத்தின் முதல் பாலிவுட் போர்ட்டல் என்ற பெருமையையும் பெற்றுள்ளது. இதன் வழியே (பணம் செலுத்தி) பாலிவுட் படங்களை ஆன்லைனில் பார்க்கலாம். டௌன்லோட் செய்து வைத்து மெதுவாகவும் பார்க்கலாம். தற்போது பழைய ஹிட் படங்கள், அமிதாப்பின் ஹிட் படங்கள் என சில நூறு படங்கள் மட்டும் கிடைக்கின்றன. இந்தப் பகுதிக்கு அவர்கள் வைத்துள்ள பெயர் 'அல்ட்ரா வெப் மல்ட்டிப்ளக்ஸ்'. இந்த தியேட்டரில் வெளிநாடு வாழ் இந்தியர்களின் கூட்டம்தான் ஜாஸ்தி!




## மாறிடுச்சு!

askjeeves.com என அடித்தால் இனி அது ask.com-ல் போய் நிற்கும். ஆம், askjeeves ஓய்வு பெற்றுவிட்டது. அதேசமயம் தன்னை அப்டேட் செய்துகொண்டு, ask.com என அவதாரம் எடுத்துள்ளது. 'தேடலின் புது வடிவத்தை நாங்கள் கொடுக்கின்றோம்' என்கிறார்கள் இவர்கள். தேடிப் பார்ப்போமே!

- முகில்

# “நான் இளைஞர் காங்கிரஸ் தலைவரா?”



சமீப நாட்களாக தமிழக இளைஞர் காங்கிரஸ் தலைமைப் பொறுப்புக்கு அடிபடும் பெயர் கார்த்தி சிதம்பரம். வருவாரா, மாட்டாரா என்று சூடாக விவாதங்கள் நடந்து கொண்டிருக்கும் நிலையில் அவரையே சந்தித்து விஷயத்தைப் போட்டுடைத்தோம்.

***இளைஞர் காங்கிரஸ் தலைவராக வருவதற்கு நீங்கள் முயற்சி செய்கிறீர்களா?***

“ஆசை, விருப்பம், எதிர்பார்ப்பு எல்லாம் இருக்க வேண்டியதுதான். ஆனால் அது குறுகிய கால வளையத்திற்குள்ளோ அல்லது உடனடி பலனைக் காணும்விதத்திலோ இருக்கக் கூடாது. கட்சி அமைப்பில் ஏதேனும் வாய்ப்புக் கிடைத்தால் சந்தோஷம். ஆனால் நமது நோக்கம் தமிழ்நாட்டில் கட்சி வளரணும்; அரசாங்கத்தில் காங்கிரஸ் பங்கு பெறணும்; அதற்கேற்றபடி நம் உழைப்பு அமையணும் என்றுதான் இருக்க வேண்டும்.”

***ஆனால் நீங்கள் இளைஞர் காங்கிரஸ் தலைவராக வருவதற்கு எதிர்ப்பு இருக்கிறதே... சமீபத்தில் சத்தியமூர்த்தி பவனில் உங்களை எதிர்த்துக் கோஷம் போடப்பட்டதே!***

“அந்தப் பொறுப்புக்குப் பலர் ஆசைப்படுவார்கள்; படட்டுமே.. அது ஆரோக்கியமான விஷயம்தானே. கட்சி நல்ல உணர்வோட்டத்துடன் இருப்பதைத்தானே அது காட்டுகிறது. இந்தியா முழுக்க ஆயிரக்கணக்கில் நல்ல திறமையுடன் ஆடும் கிரிக்கெட் வீரர்கள் இருந்தாலும், நமது நாட்டுக்காக பதினொரு பேர்தானே ஆட முடிகிறது. மற்றபடி அன்றைக்கு சத்தியமூர்த்தி பவனுக்குச் சென்று புதிய தலைவருக்கு வாழ்த்து தெரிவித்துவிட்டு வந்தபோது, நீங்கள் சொன்னது போன்ற நிகழ்வுகள் அங்கு நடந்தது பற்றி எனக்கு எதுவும் தெரியாது.”

***மாநிலத் தலைவராக உள்ள கிருஷ்ண***

**சாமியின் மகன் இளைஞர் காங்கிரஸ் தலைவராக இருக்கக்கூடாது என்று சொல்லுவதில் உள்ள நியாயம் உங்களுக்குப் பொருந்துமா?**

"என் தந்தை அமைச்சராக இருப்பதால் எனக்கு வாய்ப்புக் கொடுங்கள் என்று நான் கேட்கிறேனா? அதேசமயம் அவர் அமைச்சராக இருப்பதாலேயே எனக்கு வாய்ப்பு மறுக்கப்படக்கூடாது என்று சொல்வதில் ஏதேனும் தவறு இருக்கிறதா! அவர் அரசுப் பொறுபபில் இருக்கிறார். நான் கட்சியில் தீவிரமாகப் பணியாற்றுகிறேன். அந்த வகையில் நான் வாய்ப்புகளைத் துரத்திக் கொண்டு ஓடவில்லை. அப்படிக் கிடைத்தால் அதை பெரிய வாய்ப்பாகக் கருதி, கட்சி வளர உழைப்பேன்."

**காரைக்குடி சட்டமன்ற தொகுதியில் போட்டியிடும் நோக்கத்துடனா அங்கேயே சுற்றி வருகிறீர்கள்?**

"சிவகங்கை பாராளுமன்ற தொகுதியில் என் தந்தைக்கு உதவியாகச் செயல்படுகிறேன், அவ்வளவுதான். அரசியல் கட்சி - அரசாங்கம் ஆகியவற்றுக்கு இடையே பாலமாக இருக்கிறேன். எந்த உள்நோக்கமும் கிடையாது."

**தமிழக காங்கிரஸில் இளைஞர்கள் புறக்கணிக்கப்படுகிறார்களே...**

"இன்றைக்கு இளைஞர்களுக்கு பெரிய வாய்ப்புக் கொடுப்பது காங்கிரஸ்தான். கட்சி அமைப்பிலும், பாராளுமன்றத்திலும் நாற்பது வயதுக்கு உட்பட்டோர் அதிகமாக இருப்பது காங்கிரஸில்தான்."

**அப்பாவின் பட்ஜெட்டில் உங்களுக்குப் பிடித்த அம்சம் எது?**

"ஒட்டுமொத்தமாகப் பார்த்தால் மிக அருமையான பட்ஜெட். தொடர்ந்து கடைப்பிடிக்கப்படும் நிலையான பொருளாதாரக் கொள்கைக்கு வலுவூட்டும்படி உள்ள பட்ஜெட். விவசாயிகளுக்கு, முதியோர்களுக்கு கொடுக்கப்பட்டுள்ள சலுகைகள் எல்லோர் பாராட்டையும் பெறும். சென்னை, டெல்லி, மும்பை பல்கலைக்கழகங்களுக்கு மான்யம் கொடுத்திருப்பது மிகச் சிறப்பான ஒன்று."

**- ப்ரியன்**



# கல்கி




2006 மார்ச் 19
பார்த்திப பங்குனி 5
மலர் : 64
இதழ் : 33


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## காசி கொடுமையும் காஷ்மீர் பிரச்னையும்

**வா**ரணாஸி குண்டு வெடிப்புச் சம்பவம் நாடெங்கும் அதிர்ச்சி அலைகளைப் பரவவிட்டிருக்கிறது. இந்தக் கொடூரம் எளிதில் மன்னிக்கப்படக் கூடியது அல்ல. அமைதி காக்கும்படி கலாம் கோருவது, அச்சத்தில் நடுங்குவோருக்குப் பாது காப்புணர்வைத் தந்துவிட முடியாது. நாடெங்கும் பாதுகாப்பு ஏற்பாடுகள் முடுக்கிவிடப்படுவது அடிபட்ட, உயிரிழந்த குடும்பத்தினருக்கு ஆறுதல் அளித்துவிடவும் முடியாது.

'பிரச்னையின் வேர் இஸ்லாமிய தீவிரவாதம்தான். அது தாக்கி அழிக்கப்பட வேண்டும்' என்ற முடிவுக்கு வருவது மிகவும் சுலபம். ஆனால் பிரச்னைக்குத் தீர்வு அதுவல்ல. ஏனெனில், தீவிரவாதம் என்பதை எளிதில் அழிக்கவோ, ஜெயிக்கவோ முடியாது.

உண்மைக் குற்றவாளிகளைக் கண்டுபிடித்து தண்டிக்க முடிவதில்லை. அவர்களைத் தேடும் முயற்சியில் கணக்கற்ற அப்பாவி மக்கள்தான் பலியாகிறார்கள். அமெரிக்கா ஆஃப்கானிஸ்தான் பேரில் தாக்குதல் நடத்தியபோது இதுதான் நடந்தது. அவர்கள் எண்ணியபடி ஒஸாமா பின்லேடனைப் பிடிக்க முடியவில்லை; ஆனால் ஆஃப்கன் மக்கள் செத்து மடிந்தனர்.

பின்லேடன் பாகிஸ்தானில் பதுங்கியிருக்கிறான் என்கிற சந்தேகத்தின் பேரில் அந்த நேச நாட்டையும் குண்டு மழையால் தாக்க அமெரிக்கா தயங்கவில்லை.

ஈராக் பேரழிவு ஆயுதங்களைப் பதுக்கியிருக்கிறது என்கிற தவறான சந்தேகத்தின் பேரில் அந்நாட்டையும் தாக்கி அக்கிரமங்கள் நிகழ்த்தி, அவப்பெயர் சம்பாதித்துக்கொண்டது அமெரிக்கா.

இந்தியாவைப் பொறுத்தவரை ஹிந்து - முஸ்லிம் பிரச்னை




பல ஆண்டுகளாக உள்ளது என்றால், உலகம் முழுவதிலும் முஸ்லிம் - முஸ்லிம் அல்லாதவர் என்ற பிளவை சமீபகாலமாக அதிகப்படுத்தி நிரந்தரப்படுத்தவும் வித்திட்டுள்ளது அமெரிக்க அதிபர் புஷ்ஷின் அணுகுமுறை.

இந்த அணுகுமுறை தந்த துணிச்சலில்தான் இஸ்லாமிய தேவ தூதர் குறித்து கேலிச் சித்திரங்கள் வெளியிடுவது போன்ற சீண்டிப் பார்க்கும் நிகழ்வுகளும் விளைகின்றன.

இந்தியாவுக்கு புஷ் வந்தபோது எழுந்த எதிர்ப்பு, நமது அணு உற்பத்திக் கொள்கையில் அமெரிக்கத் தலையீட்டை விரும்பாததால் மட்டும் நிகழ்ந்துவிடவில்லை. அடுத்தடுத்து முஸ்லிம் நாடுகளை அமெரிக்கா குறிவைப்பதும் ஏதேனுமொரு காரணத்துக்காக அவற்றின் மீது தாக்குதல் நடத்த முற்படுவதும் உலக அளவில் ஒரு பிரிவினை உணர்வைத் தோற்றுவித்து வருகிறது. இஸ்லாமிய உலகம் Vs இஸ்லாமியர் அல்லாதார் உலகம் என்ற இந்தப் பிரிவினை உணர்வே புஷ் வருகைக்கு எதிராக இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் எதிர்ப்புக் கோஷங்களையும் ஆர்ப்பாட்டங்களையும் உருவாக்கியது.

புஷ்ஷுடன் கைகுலுக்கிய இந்தியப் பிரதமர் அமெரிக்காவுடனான உறவுகளைப் பலப்படுத்த முயன்ற கையோடுதான் வாரணாஸி குண்டு வெடிப்புகள் நிகழ்ந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

இதுநாள்வரை, இந்தியாவில் இஸ்லாமிய அடிப்படைவாதம் Vs ஹிந்து அடிப்படைவாதம் என்கிற நெருக்கடியே நிலவி வந்தது. இப்போது, உலகளாவிய இஸ்லாம் Vs இஸ்லாம் அல்லாதார் மோதலின் தெறிப்புகளும் இந்தியாவை எட்டுகின்றன ; ஆட்டுவிக்கின்றன.

இந்தப் போக்கினால் உலகெங்கும் அபாயம் பெருகும், மனித நேயம் மாண்டு போகும் என்ற போதிலும் இந்தியாவுக்கு ஏற்படக்கூடிய பாதிப்பே மிக அதிகமாக இருக்கும். 140 மில்லியன் முஸ்லிம்கள் வாழும் நாடு இது. ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை இல்லையேல் இந்தியாவே இல்லை.

இந்திய அரசு உள்நாட்டுப் பாதுகாப்பை பலப்படுத்தினால் போதாது ; காஷ்மீர் பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வு காண முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும். அதே தீவிரத்துடன் மதப் பிரிவினையைத் தூண்டும் நாடுகளைத் தட்டிக் கேட்கும் அயலுறவுக் கொள்கையையும் சிந்தித்து உருவாக்க வேண்டும்.

பயங்கரவாதத்தை பயமுறுத்தலால் வெல்ல முடியாது. தேசத் தந்தை காட்டிய அன்பு மார்க்கம் ஒன்றே வெற்றி பெற வழி. ●



"**வா**ய்தா என்ற வார்த்தை ஒரு தரப்பினருக்கு வசதியாக இருக்கிறது. மற்றொரு தரப்பினருக்கு அதுவே வலி. இந்திய நீதிமன்றங்களில் தேங்கிக் கிடக்கும் வழக்குகள் பற்றி விவாதம் எழும்போதெல்லாம் 'நீதி தூங்குகிறது' என்ற பொதுவான குற்றச்சாட்டு கூடவே எழும். உண்மை அதுவல்ல. மக்கள் தொகை பெருகப் பெருக, வழக்குகளும் பெருகி வருகின்றன. நமக்கு நீதி கிடைக்க காலதாமதம் ஆகிறதே என்று கவலைப்படுகிற ஒவ்வொருவரும், பிரச்னை தீர ஒரு உடனடி வழி இருப்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

நீதிமன்றத்துக்கு வெளியே (out of court settlement) இருதரப்பும் ஏற்றுக்கொள்கிற நடுநிலையாளர் மூலம் பிரச்னையைப் பேச்சுவார்த்தை மூலம் தீர்த்துக் கொள்ளலாம். இதை வாதி, பிரதிவாதி இருவருமே ஏற்பாடு செய்து கொள்ளலாம். இதற்கு சட்டத்தில் இடமிருக்கிறது" என்று சொல்கிறார் சென்னை, பெங்களூர் உயர்நீதிமன்றங்களைக் கலக்கும் இளம் பெண் வழக்குரைஞரான ஐஸ்வர்யா. தமிழ்கூறும் நல்லுலகின் தேர்ந்த தொலைக்காட்சி செய்தி வாசிப்பாளராக அறியப்படும் ஷோபனா ரவியின் தலைமகள்.

"அமெரிக்கா, ஐரோப்பா உள்ளிட்ட உலக நாடுகளில், வழக்கு விசாரணைக்கு வரும் முன்பு, இருதரப்பினரும் கண்ணோடு கண் பார்த்துப் பேசிக்கொள்ள ஏற்பாடு செய்கிறார்கள். நீதிமன்றத்துக்கு வெளியே நிகழும் இந்தச் சந்திப்பு, சமாதானத்துக்கான முதல் புள்ளியாக இருக்கும். உலகத்துக்கு சமாதானத்தையும், அமைதியையும் அள்ளிக் கொடுத்த நமக்கு, இது சர்வ நிச்சயமாய் சாத்தியம்" என்று துடிப்பாகப் பேசும் ஐஸ்வர்யா, போட்டி மனப்பான்மையை வளர்க்காத பள்ளியில் படித்ததே தம்மைப் பண்படுத்தியது என்கிறார்.

"ஜே.கிருஷ்ணமூர்த்தியின் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு தொடங்கப்பட்ட கே.எஃப்.ஐ பள்ளியில் பயின்றேன். அங்கே எட்டாம் வகுப்பு வரை தேர்வு என்பதே கிடையாது. தனித்திறமைகளை வெளிப்படுத்த விளையாட்டுக்கள், பேச்சு, எழுத்து, பாடல், நடனம் என எல்லாமும் உண்டு. ஆனால் வெற்றிபெற்ற அணி, தோல்வியுற்ற அணி என்று எதுவும்

**ஐஸ்வர்யா ரவி**

கிடையாது. பாடத்திட்டம் என்பதைக் காட்டிலும் சொந்தமாகக் கற்றுக் கொள்ள வைக்கிற செல்ஃப் லேர்னிங் முறை, என்னிடம் உபரியாக என்ன திறமை இருக்கிறது என்பதை உணர வைத்தது. வெற்றிகரமான வாழ்க்கை முறையைக் கற்றுக் கொடுத்த அந்தப் பள்ளிதான் எனக்குள் ஆளுமையை வளர்த்த முதல் பெரிய பாதிப்பு.

நான் பிறக்கும்போதே அம்மா செய்தி வாசிப்பாளர். எனக்கு இரண்டு வயதாக இருக்கும்போது டீ.வியில் தோன்றும் அம்மாவை ஆச்சர்யமாகப் பார்த்தபடி, டீ.வி பெட்டியின் பின்னால் சென்று அம்மாவைத் தேடியிருக்கிறேன். அதன் பிறகு தொடக்கப் பள்ளியில் படித்த சமயம் நாட்டு நடப்புகளை செய்திகளாக அம்மா வாசிக்கும்போது, தினசரி அம்மாவுக்கு எப்படி இத்தனை விஷயங்கள் தெரியும் என்று ஆச்சர்யமாக இருக்கும். உயர்நிலைப் பள்ளியை எட்டிய பிறகு...

அம்மாவின் கம்பீரமான குரல், தெளிவான உச்சரிப்பு இவற்றையெல்லாம், மற்ற செய்தி வாசிப்பாளர்களோடு ஒப்பிட்டுப் பார்த்து ஆச்சர்யப்படுவேன். ப்ளஸ்டூவை எட்டும் போது எனது முகத்தைப் பார்த்து, 'நீங்க ஷோபனா ரவி மகள்தானே?' என பட்டென்று கேட்டுவிடுவார்கள். அம்மாவுக்கும் எனக்கும் அப்படியொரு உருவ ஒற்றுமை. உருவத்தில் இருந்த ஒற்றுமை திறமையிலும் இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. அம்மாவைப் போல நானும் தரமான செய்தி வாசிப்பாளராக ஆகியிருக்க முடியும். ஏனோ அதில் எனக்கு விருப்பமில்லாமல் போய்விட்டது. கல்லூரியில் படிக்கிற போது, கிடைத்த விடுமுறையில் பொழுதுபோக்காகவும், பாக்கெட் மணிக்காகவும் ஆங்கிலச் செய்தி வாசிப்பாளராக சில மாதங்கள் பணிபுரிந்தேன். ஆனால் எனது ஆர்வமெல்லாம் சட்டத்தின் மீதே இருந்தது.

எனது அம்மாவின் தாயார் டி.ஜானகி, அகில இந்திய வானொலியில் செய்தி வாசிப்பாளராக ஜொலித்தவர். பாட்டியின் நேரடி பாதிப்பு என்றாலும், தனித்துவமான செய்தி வாசிப்பாளராகத் தன்னை நிலைநிறுத்திக் கொண்டவர் அம்மா. அப்பா ஒரு வழக்கறிஞர் என்று தெரியும் முன்பே, 'நீ என்னவாகப் போகிறாய்' என்று கேட்டபோது 'நீதிபதி' என்றேன். பின்னால் சட்டம் பயின்று அப்பாவிடமே ஜூனியராகப் பணிபுரிந்தபோதும் அவரது பாதிப்பு இல்லாத தனித்துவம் மிக்க வழக்குரைஞராக வெற்றி பெறவே விருப்பம்'' என்று சொல்லும் ஐஸ்வர்யா, தந்தை ரவியின் ரூஹன் அண்ட் ஆர்யா லா ஃபர்ம் நிறுவனத்தின் பெங்களூர் கிளையை நிர்வகித்து வருகிறார்.

# பெண்கள் பேச ஆரம்பித்தால்...

''ஆண்கள் ஆட்சி செய்யும் எல்லாத் துறையிலும் இன்று காலடி பதித்து கலக்கிக் கொண்டிருக்கிறார்கள் பெண்கள். கணவர், குழந்தைகள் என்று குடும்பத்தைப் பராமரிப்பதிலேயே வாழ்க்கையைச் செலவிடுகிற பெண்களும் அதிகமாகவே இருக்கிறார்கள். இந்த இரண்டு தரப்புக்குமே சமூகத்தை உருவாக்குவதில் அதிக பங்கிருக்கிறது. இன்று பெண்களின் முன்னேற்றத்துக்கு வாய்ப்புகள் மட்டும்

போதாது. 'பர்சனாலிட்டி டெவலப் மெண்ட்' எனும் மாயாஜாலம் இன்று பெண்களுக்கும் தேவை. இதை பெண் களே வளர்த்துக்கொள்ள வேண்டும். 'பெண் புத்தி பின் புத்தி' என்று மடமை யாகத் தமிழில் ஒரு பழமொழி உண்டு. அதைப் பெண்கள் பொய்யாக்க வேண்டும். அதற்கு முதலில்



• குடும்பத்துடன்...

புத்திகூர்மையை அவர்கள் வளர்த்துக்கொள்ள வேண்டும். டாக்டர் முத்துலட்சுமியைப் போல கூர்மையாக இருந்தால் ஒவ்வொரு பெண்ணும் வெற்றி பெற முடியும்!

அவர் தமிழகத்தின் முதல் பட்டதாரிப் பெண்மணி. தமிழகத்தில் மருத்துவப் பட்டம் பெற்ற முதல் பெண், தமிழக அரசியல் வரலாற்றின் முதல் சட்டமன்ற உறுப்பினர் என்பது உள்பட பல பெரு மைகளைப் பெற்றவர் டாக்டர் முத்து 'லட்சுமி. அவர் சட்டமன்ற உறுப்பினராக இருந்தபோது சட்டப் பேரவையில் ஒரு நிகழ்ச்சி. அப்போது தேவதாசிகள் முறை வழக்கிலிருந்த காலகட்டம். தேவதாசி களின் வாழ்க்கை அவலத்தைக் கூறி, தேவதாசிகள் முறையை ஒழிப்பதற்கு சட்டம் இயற்ற வேண்டும் என குரல் கொடுக்கிறார் முத்துலட்சுமி. அவர் குரலுக்கு எதிராக உடனடியாக ஒரு ஆண் குரல். 'தேவதாசிகள் இல்லாவிட்டால், குடும்பப் பெண்கள் அச்சமின்றி வெளியே நடமாட முடியாது. ஆண்களில் பலரும் ஒழுக்கங்கெட்டு வெளியில் செல்ல ஆரம்பித்து விடுவார்கள். தேவதாசிகள் இருப்பதால்தான் சமூகம் ஓரள வாவது அமைதி யாக இருக்கிறது' என்று முத்து லட்சுமி சார்ந்தி ருக்கும் கட்சித் தலைவரே எதிர்த்து வாதிடுகிறார். இதற்காக முத்துலட்சுமி அதிர்ச்சியடையவில்லை.

'சமூகத்தின் மீது அக்கறையுள்ள தலைவர் இரு......... அவர்கள், தம் வீட்டுப் பெண்ணை தேவதாசியாய் அனுப்பி வைப்பாரா' என்று நிதானமாகக் கேட் டதும் மொத்த அவையும் வாயடைத்துப் போய்விட்டது. அன்று மட்டும் டாக்டர் முத்துலட்சுமி கொஞ்சம் அசட்டையாக பதில் சொல்லியிருந்தால், அடுத்த சில தினங்களில் தேவதாசி முறை ஒழிப்பு சட்டமாகி இருக்காது.

பெண்கள் பேச வேண்டிய நேரத்தில் பேச வேண்டும். கூர்மையாகப் பேச வேண்டும். அதிகமாகப் பேசுவதைவிட, அளவாக, ஆக்கபூர்வமாகப் பேசுவதுதான் பெண்களுக்குச் சிறந்த அணிகலன்'' என்கிறார் ஐஸ்வர்யா.

தொகுப்பு : **ஆர்.சி.ஜெயந்தன்**

படங்கள் : **புதூர் சரவணன்**

ஜோதிட நூல்கள் வரிசையில்
இதுவரை எவருமே வெளியிடாத நூல்!

# பிரம்ம ரிஷி வாக்கியம்

**விலை ரூ.190 சலுகை விலை ரூ.150**

தபாலில்பெற ரூ.180




❊ லக்னம் அல்லது ராசி சக்கரப் பலன்கள் ❊ நவாம்ச சக்கர பலன்கள் ❊ திரேக்காண சக்கர பலன்கள் ❊ ஹோரா பலாபலன்கள் ❊ 73 யோகங்களும் அதற்கான மூன்ஜென்ம வினைகளும், வினை தீர பரிகாரங்கள் ❊ கிரக சேர்க்கைப் பலன்கள், ❊ பன்னிரு பாவ பலாபலன்கள் ❊ ஸ்திரீ புருஷ ஜாதகப் பொருத்தம் பார்க்கும் வழிமுறைகள் ❊ சிறந்த குழந்தை பெற வழிமுறைகள் அடங்கிய கர்ப்பா தானப் படலம் ❊ சிசு ஜெனனப் படலம் ❊ கண்டாந்தம் - ஆயில்யம் - கேட்டை - மூலம் நட்சத்திர தோஷ விவரங்கள் போன்ற இன்னும் பல நுணுக்கமான ஜோதிட விஷயங்கள் அடங்கிய நூல்!

---

## ஸ்ரீ விய வருஷத்திய சுபமுகூர்த்த நாட்கள் மற்றும் பண்டிகை விசேஷங்கள்

**விலை ரூ.25**

தபாலில் பெற ரூ.35

**நாம் கொண்டாடிவரும் பண்டிகைகளைப் பற்றி தெரிந்துகொள்ள ஒவ்வொரு வீட்டிலும் இருக்க வேண்டிய புத்தகம்.** சதுர்த்தி விரதம், சஷ்டி விரதம், கிருத்திகை விரதம், அமாவாசை விரதம், பௌர்ணமி விரதம், ஏகாதசி விரதம், சிரவண விரதம், மாத சிவராத்திரி விரதம், பிரதோஷ விரதம், அக்ஷய த்ருதியை, வரலக்ஷ்மி விரதம், நவராத்திரி விரதம், அனந்த விரதம், தீபாவளி, பொங்கல் போன்ற **அனைத்து பண்டிகைகளும் ஏன்? எதற்கு? எப்படி? எப்போது? கொண்டாட வேண்டும் என்னும் விவரங்கள்.**

தினசரி சூரிய உதய அஸ்தமனத்திற்கேற்ப திருத்தம் செய்யப்பட்ட துல்லியமான இராகுகாலம், எமகண்டம், குளிகை, சுபஹோரைகள் அனைத்து சுபகாரியங்களுக்கும் தனித்தனி நல்ல நாட்கள் பற்றிய விவரங்களும் கூடிய நூல்.

### நேரில் பெற

❊ சென்னை : வர்த்தமானன் ✆ : 24364174 / 55666727
❊ கோவை : விஜயா பதிப்பகம் ✆ : 2382614 / 2394614
❊ சேலம் : சந்திரா ✆ : 2265635
❊ திருச்சி : திருச்சி புக் ஹவுஸ் ✆ : 2764198 / 2766815
❊ மதுரை : செல்வி ✆ : 5380169 / 2343510
❊ நெல்லை : அருள் நந்தி சிவம் ✆ : 2339692 / 2338443
❊ திருவண்ணாமலை : ஸ்ரீ அருணா வரதன் ✆ : 250272 / 254600
❊ காஞ்சிபுரம் : குரு ✆ : 27260256
❊ விழுப்புரம் : கீதா ✆ : 225183 / 9865754879
❊ புதுக்கோட்டை : எஸ்.பி.எம். ✆ : 230035 / 9443531950
❊ தஞ்சாவூர் : அன்னம் ✆ : 279288 / 9443159371
❊ தருமபுரி : சதீஷ் ✆ : 268112

### தபாலில் பெற

கடிதம் எழுதுக. நூல்களை வி.பி.பி.யில் அனுப்புகிறோம். தபால்காரரிடம் உரிய தொகையை கொடுத்து நூலினைப் பெறலாம்.

கடிதம் எழுத வேண்டிய முகவரி

**வர்த்தமானன் பதிப்பகம்**
40, சரோஜினி தெரு,
தியாகராய நகர், சென்னை 17.

## ஸ்ரீவிய வருஷத்திய ஸ்ரீநிவாஸன் பஞ்சாங்கம்

**(இன்றைய இளைய சமுதாயத்தினரும் புரிந்துகொள்ளும் விதத்தில் கணிக்கப்பட்ட சுத்த திருக்கணித சர்வ முகூர்த்த பஞ்சாங்கம்)**

**விலை ரூ.46** தபாலில்பெற ரூ.65

★ எண் கணிதம், வாஸ்து சாஸ்திரம் அடங்கிய முழுமையான பஞ்சாங்கம் ★ இந்திய விண்வெளி ஆராய்ச்சியாளர்களின் மிகச் சரியான அயனாம்சம் கொண்டு கணிக்கப்பட்ட ஒரே திருக்கணித பஞ்சாங்கம். ★ லக்கினக் கண்ணாடி, நட்சத்திர தாரா பலன் அட்டவணை, உலகம் முழுவதும் பயன்படுத்தும் வழிமுறைகள் ஆகிய அனைத்தும் அடங்கிய ஒரே பஞ்சாங்கம்.

**இந்நூல்களின் ஆசிரியர் :**

பாரம்பரிய ஜோதிட ஆகம புரோஹிதர்
சேலம் முராரி வா. நரநாராயணன்

வெளியீடு :

**முராரி பப்ளிகேஷன்ஸ்**
சேலம்-1. ✆ : 0427-2452605

# அந்நியன்

**4 வாரத் தொடர்**

ரெண்டாம் பிள்ளை ஊருக்கு வருகிறான் என்று தபால் வந்ததுமே விசாலாச்சி ஒரு பெரிய ஏணி வைத்து வீட்டின் கூரையில் ஏறி நின்று கொண்டாள். பார்த்த அத்தனை பேரும் வாயடைத்துப் போனார்கள். "யேய், விசாலாச்சி...! எதுக்கு இந்த வயசுல அத்தனை ஒசரமா ஏறி நிக்கிறவளாம்?" என்று பதறினார்கள். கம்பெடுத்து நடக்காத குறையாக உடல் தளர்ந்து, தலையெல்லாம் நரைத்து ஒரு கொய்யாப்பழம் அளவுக்குக் கொண்டை போட்டிருக்கும் விசாலாச்சி, போன வாரம்தான் பக்கத்து ஊர் தருமாஸ் பத்திரிக்குப் போய் இரண்டு சொத்தைப் பல்லைப் பிடுங்கிக்கொண்டு வந்திருக்கிறாள். வயது ஐம்பதைத் தாண்டுகிறது. இந்த வயதில் விசாலாச்சிக்கு பல்லிலும் பலம் கிடையாது; உடம்பிலும் தெம்பு கிடையாது. ஆனாலும் பலமற்ற தொடை நடுங்கக் கூரைமீது ஏறி நின்றாள்.

கூரை ஏறி பதுங்குவதற்கு ரெண்டாம் பிள்ளை ஒன்றும் அஞ்செட்டி காட்டிலிருந்து தப்பி வந்த கரடியோ, காசு கேட்டு வரும் கந்துவட்டிக் காரனோ இல்லை. விசாலாச்சியின் சொந்த மகன்தான். விசாலாச்சிக்கும் கடன் வாங்குமளவுக்குத் தரித்திரம் இல்லை. முறம் சோளத்துக்குக் காசில்லாமல் வெற்றிலை வியாபாரியிடம் கையேந்தி நின்றதெல்லாம் அந்தக்காலம். இப்பொழுது ரெண்டாம் பிள்ளை பெரிய உத்தியோகத்தில் கை நிறைய சம்பாதிக்கிறான். கார், வீடு என்று சொந்தத்தில் வைத்துக்கொண்டு மோட்டார் வண்டிகள் பேய் போல ஓடும் பெரிய டவுனில் இருக்கிறான். மாசா மாசம் வேண்டிய அளவுக்குப் பணம் அனுப்பி வைக்கிறான்.

ஆண்டுக்கணக்கில் வராத தன் மகன் இப்பொழுதுதான், 'ஒரு வாரம் அங்கே வந்து இருக்கேன்' என்று மனசு வந்து எழுதியிருக்கிறான். அதைவிட தன் பேரன் வருகிறான் என்றதும்தான் அவளுக்குத் தலைகால் புரியாமல் பித்தேறிவிட்டது. பித்தேறியதால்தான் தன் பலம் அறியாமல் கூரை மேல் ஏறிக்கொண்டாள். கூரையெல்லாம் பொத்தலாக இருக்கிறது. பேரனும் மருமகளும் வசதியாக வாழ்ந்து பழக்கப்பட்டவர்கள். அவர்கள் சவுகர்யமாக இருக்க வேண்டுமே!

கூரையைச் சரிசெய்ய ஆள்காரனுக்கு மேல் ஆள்காரனாக சொல்லி அனுப்பியாயிற்று. இதோ அதோ என்று போக்குக் காட்டுகிறவர்கள் வரும் பாட்டைக் காணோம். "நாயைக் கூப்பிடற நேரம் நாமே அள்ளலாம்..." என்று வராத ங்கொப்புரான்களைத் திட்டியபடி அவளே தென்னை ஓலையும் வைக்கோலும் எடுத்துப்போட்டு வேலையை ஆரம்பித்துவிட்டாள்.

பயத்தில் சிலுப்பிக்கொண்ட பூனை முடிபோல ஏறுக்கு மாறாய் வைக்கோல் போர்த்தும் விசாலாச்சியை பயத்தோடு பார்த்தான் அவள் கணவன் பரமன். அவள் மட்டும் கீழே விழுந்தால் விழுந்த இடத்தில் மண் தோண்டிப் புதைக்க வேண்டியதுதான். 'இந்த வயசில வேணாம் விசாலாச்சி' என்று அவன் சொன்னதும் சண்டைக்கு வந்துவிட்டாள்.

வீடு இந்தக் கதி என்றால் வீட்டுக்குள் மத்ததும் அதே கதிதான். படுக்க நல்ல பாய் கிடையாது. போர்த்திக்கொள்ள நல்ல போர்வை கிடையாது. சாய்ந்து உட்காரும் சுவரெல்லாம் எண்ணெய்ப் பிசுக்கு. தரையெல்லாம்





# எழில்வரதன்

புழுதி, வரும் பையனை எங்கே உட்காரவைத்துச் சாப்பாடு போடுவது?

சரி வெளியே காற்றாட உட்கார வைக்கலாமென்றால் கயிற்றுக் கட்டில் செத்து ரெண்டு வருஷம் ஆகிறது. தேங்காய் நார்ப் பிறி அறுந்து தொங்கிவிட்டது. கட்டிலில் உட்கார நினைத்தாலும் கட்டிலுக்கு நடுவே தரையில்தான் உட்கார வேண்டும். சரிசெய்ய அதற்கும் ஆள் சொல்லியாயிற்று. அவனும் வரவில்லை. சாகிற காலத்தில் சகலத்திற்கும் அலைகிறாள் விசாலாச்சி. பரமன் மனசு கேட்காமல் கேட்டுவிட்டான்.

"என்ன விசாலாச்சி, கலெக்டரா வரான்? இந்த பரபரக்கிறே... பையன் தானே... ஒண்ணும் நெனைக்க மாட்டான் விடு"

"கலெக்டர் வந்தாலும் கரிச்சட்டிய கழுத்துப் போட்டு, இதான் எங்க வீட்டுல இருக்கு உக்காருன்னு சொல்லிப் புடுவேன்... வரது எம் மகன்யா. அவன் சவுகரியமா இருக்கணும்... ஆமாம்" என்கிறாள் விசாலாச்சி.

டவுனில் இருக்கும் தன் மகன் வீட்டை நினைத்தால் கண்கள் விரியும்

"இன்கம்டாக்ஸ் அதிகாரியா இருக்கறது சிரமமா இருக்கு!"

"ஏன்?"

"கனவுல வர்ற நடிகைங்க நடுங்கிக்கிட்டே வர்றாங்க!"

- ஏ.கே. நாசர்

விசாலாச்சிக்கு. "எத்தனை பளபளப்பா இருக்கு தரை. எவ்ளோ பெரிய பெரிய ஜன்னல், எத்தனை ஓசரமான கதவு, செவுரெல்லாம் கழுவி வெச்ச பித்தளை அண்டா மாதிரி பளிச்சினு இருக்கு. மருமக எத்தனை சுத்தமா வெச்சிருக்கா வீட்ட! கண்ணாடியாட்டம் இருக்கே யம் மாடியோவ்... அப்படி ஒரு வீடு கட்டி எம் மவன் பொழைப்பான்னு நான் கனவு லயும் கண்டதில்லை" என்பாள் விசாலாச்சி.

பரமனுக்கும் அதே ஆச்சர்யம்தான். ஆனால் ஒரு நாளுக்கு மேல் அந்த வீட்டில் அவனால் இருக்க முடிந்ததில்லை. மறுநாளே 'வீட்டுக்குப் போவம் விசாலாச்சி...' என்று குடைச்சல் கொடுக்க ஆரம்பிப்பான் மனுசன்.

"இதும் உன் வீடுதான்யா? இங்கயே இரேன்" என்று விசாலாச்சி சமாதானம் செய்வாள். ஆனாலும் தலையாட்டி மறுப்பான் பரமன். "இல்ல விசாலாச்சி, எதோ ஆபீசரு வீட்டுல தங்கியிருக்க மாதிரி எனக்கு பதபதப்பா இருக்கு."

தன் புருசனின் நொணநொணப்பு தாங்காமல் விசாலாச்சியும் கிளம்பிவிடுவாள். துணிமணி, தின்பண்டம் என்று ஏகப்பட்ட பொருட்களை பையில் திணித்துக் கொடுத்து கை நிறைய காசும் கொடுத்து வழியனுப்பி வைப்பான் ரெண்டாம் பிள்ளை. வருகிற வழியெல்லாம் பேரனின் நினைப்பாகவே இருக்கும். அந்தச் சின்ன கை, பட்டு உதடு... அது ஒரு சிவப்பு பொம்மை. "பேரனை விட்டுட்டு நான் போயி அங்க கிடந்து என்னத்தைச் சாதிக்கப் போறேன்..." என்று வரும் வழியெல்லாம் இமைகளுக்குள் அழுதபடி வீட்டுக்குத் திரும்புவாள்.

"இங்க வந்து சவுகரியமா இருக்கலாம் இல்ல?" என்று ரெண்டாம்பிள்ளை அடிக்கடி கூப்பிடத்தான் செய்கிறான். அங்கே வசதிக்கு ஒன்றும் குறைச்சல் இல்லை. நேரத்துக்கு சாப்பாடு, பாக்கறதுக்கு டீவிப் பெட்டி, தூங்க நல்ல எடம், தண்ணி எடுக்கத் தேவையில்லை, சமைக்கத் தேவையில்லை, தொவைக்கத் தேவையில்லை... சொகமாத்தான் இருக்கலாம். ஆனால் அங்கே போகலாமென்றால் இங்கே இருக்கும் ஒரு பழுத்த கிழத்தை என்ன செய்ய?

அந்த பழுத்த கிழம் விசாலாச்சியின் அம்மாதான். பேரு அம்மாக்கண்ணு. "எனக்கு எம்பத்தி ரெண்டு வயசாவுது" என்று பத்து வருஷமாக ஒரே வயதைச் சொல்லும் அம்மாக்கண்ணு, வெளியூர் என்று இதுவரைக்கும் எங்கும் போனதில்லை. "இந்த மண்ணுல பொறந்து வளர்ந்து வாழ்ந்துட்டவ. இங்கதான் சாவணும். வேற மண்ணுல சாவ மாட்டேன்" என்று சொல்லிவிட்டு, தன் பேரனுக்குப் பிறந்த மகனைக்கூட பார்க்கப் போகவில்லை கிழவி.

அனாதையாகிப் போன பரமனை வளர்த்து ஆளாக்கி ஒரு பொண்ணும் தந்து மனுஷனாக்கியவள் அம்மாக்கண்ணுதான். அந்த உபகாரத்திற்காக "கடைசிவரை உன்னை கஷ்டமில்லாம பாத்துப்பேன்" என்று வாக்கு குடுத்திருக்கான் பரமன். அதற்காகத்தான் மகன் வீட்டிலும் ரெண்டு நாள் தங்காமல் பதறிக்கொண்டு வந்து இங்கேயே இருக்கிறான்.

இவர்களின் ஒட்டை குடிசையில் ஏறி எப்படியோ பூனை முடிபோல ஏறுக்கு மாறாகப் போர்த்தி முடித்த வீம்பு விசாலாச்சி, கீழே இறங்க முடியாமல்

தவித்தான். வழியில் போன ரெண்டு பேரைக் கூப்பிட்டு அவளைப் பத்திரமாக இறக்க வேண்டியதாயிற்று. அதன்பிறகு தானே மண் எடுத்து வந்து சுவர்ப் பொந்துகளை அடைத்தான். சுண்ணாம்பு அடித்தான். தரையின் பள்ளங்களை செங்கல் போட்டு அடைத்து, சாணம் போட்டு மெழுகினாள். கதவு துடைத்தாள். பொட்டு வைத்தாள். பெருமூச்சு விட்டாள். சுருண்டு படுத்துக்கொண்டாள்.

வயசான காலத்தில் இத்தனை பாடு படுவதற்குக் காரணம் மகன் வெகுநாள் கழித்து வருவதால் மட்டுமில்லை. அவன் ஆறுவருட தவமிருந்து பெற்ற பிள்ளை. அது சாதாரண தவம் இல்லை பெருந் தவம்.

கல்யாணமாகி வருஷம் ஆகியும் கரு தங்கவில்லை என்று விசாலாச்சி தின்னாத மருந்து கிடையாது. பண்ணாத மாயம் கிடையாது. காவிரிக் காட்டில் மாட்டு மந்தை மேய்க்கும் கொருக்கன் கொண்டு வந்து கொடுத்த பச்சிலையைத் தின்று தின்று வாய் கசந்ததுதான் மிச்சம். மாரியம் மன் கோயிலுக்குப் போய் வாரமானால் சாட்டை அடித்ததில் புண் வந்ததுதான் மிச்சம். பேய் பிடித்திருக்குமென்று இரண்டுமுறை பேய் ஓட்டியதில் முடி உதிர்ந்ததுதான் மிச்சம். வயிற்றில் ஒரு உசி ரைக் காணோம்.

பச்சகாளி குட்டையில் இருக்கும் ஒரு மாரியம்மன் கோயில் பூசாரி நன்றாகக் குறி சொல்வான் என்பதை யாரோ சொல் லக் கேட்டு விசாலாச்சி தன் புருஷனை விடியக்காலையிலேயே கூட்டிக் கொண்டு பத்து மைலுக்கு நடந்து போனாள். அமாவாசை ராத் திரியில் உடம்பெல் லாம் வெடவெடத்துப் போகும்படி உடுக்கை அடித்து பாட்டுப் பாடியபடி குறி சொன்ன கோயில் பூசாரியின் உடுக்கைச் சத்தத்தை விட, சிவந்து உருட்டிய முட்டைக் கண் கள் பயமுறுத்துவதாய் இருந்தன. பயபக்தி யோடு ரெண்டு பேரும் பூசாரிக்கு முன் மண்டியிட்டு உட்கார்ந்துகொண்டு பிள்ளை வரம் கேட்டார்கள்.

பூசாரி பரட்டைத் தலையை அவிழ்த் துப் போட்டுக்கொண்டு, முட்டைக் கண்ணை உருட்டி, உடுக்கை அடித்து ஆடியபடி ஒரு பாட்டுப் பாட ஆரம்பித் தான். பாடி முடித்துவிட்டு "சொன்னது புரிஞ்சுதாடா?" என்று பரமனைக் கேட்க, "ஒண்ணும் புரியலையே, ஆத்தா" என்று பரமன் பச்சைப் பிள்ளையாய் நின்றான். விசாலாச்சிக்கும் ஒன்றும் புரியவில்லை.

"என்னடா புரியலங்கற..! உன் பொண் டாட்டிக்கு முன் ஜென்மத்து தோசம் இருக்குடா. அவ வயித்தில ஒரு புழு பூச்சி பொறக்காதுடா..." என்றான் பூசாரி.

பதறிப்போன விசாலாச்சி பூசாரி காலில் விழுந்து, ''ஆத்தா உம் புள் ளைங்கள நீதான் காப்பாத்தோணும்'' என்று கதறிவிட்டாள் கதறி.

உடுக்கைச் சத்தத்தைவிட பயமுறுத்திய அவளின் கதறலுக்கு பூசாரியே பயந்து போனான். பிறகு சின்னதாக உடுக்கை தட்டி சன்னமாக ஒரு பாடலைப் பாடிக் கொண்டே யோசித்தவன், "ஒரு வழி சொல்லுவேன். கேட்டு நடந்தா கொழந்தை பொறக்கும்" என்றான்.

''குத்தமில்லாம சொன்னபடி நடக் கறோம் சொல்லு ஆத்தா'' என்றாள் விசாலாச்சி.

''நீ சும்மாயிரு. உனக்குத்தான் கொழந்தை பொறாக்காதுன்னு அப்பமே சொல்லிட்டேனே" என்று விசாலாச்சியை அடக்கிய பூசாரி, பரமனிடம், "டேய் என் பேச்சைக் கேட்டா உனக்குக் கொழந்தை பொறக்கும்டா'' என்றான்.

(தொடரும்)





# மரபின் மைந்தன் முத்தையா

'பட பட'வென கதவு தட்டப்பட்டது. பதறிப்போய்த் திறந்தார் அந்த மனிதர். பக்கத்து வீட்டுக்காரர் நின்றிருந்தார். "சார்! உங்க பையனைக் கண்டிச்சு வைங்க. நான் வீதியிலே போறப்ப கல்லை விட்டெறியறான்" என்றார். "அடி பட்டுச்சா சார்!" "இல்லை! நல்ல வேளையா குறி தவறிடுச்சு" என்றதும் இவர் சொன்னார், "சார்! அப்ப அது கண்டிப்பா என் பையனா இருக்காது. அவன் அடிச்சா குறியே தவறாது. வேணும்னா எதிர்வீட்டுக்காரரையும் மூணாவது வீட்டுக்காரரையும் கேளுங்க" என்று.

**வா**ரிசுகளை மட்டுமல்ல, வாழும் உயிரினங்களை எல்லாம் தங்கள் வசதிக்கேற்ப பழக்குவதில் மனிதர்கள் கெட்டிக்காரர்கள். அமெரிக்கா சென்றிருந்த போது, அசுர வடிவிலிருக்கும் சுறாமீன்களின் அசகாய சூரத்தனங்களை சனன்டானியோ கடல் உலகத்தில் காண முடிந்தது. அதில் வியப்பை விடவும் வருத்தம்தான் வந்தது.

சைக்கிள் ஓட்டும் யானை, சலாம் போடும் கரடி, சர்க்கஸ் காட்டும் சுறா எல்லாமே ஆறாம் அறிவின் அத்துமீறல்கள்தான் என்றுபட்டது. ஒவ்வோர் உயிரையும் அதன் இயல்பான திறமை வெளிப்படும்படியாக வாழ அனுமதிப்பதுதான் உலகின் மகத்தான அதிசயமாக இருக்க முடியும்.

அந்த சுறாமீன்களைப் பார்த்தபோது எனக்கு இந்திய இளைஞர்களின் நினைவுதான் வந்தது. ஏனென்று கேட்கிறீர்களா? பதினோராயிரம் பவுண்டு எடையுள்ள சுறாமீன்கள், பழக்கப்பட்ட நாய்க்குட்டிகள் போல் பயிற்சியாளர்கள் இழுத்த இழுப்புக்கெல்லாம் இடம் கொடுக்கின்றன.

# வாழ்க்கையை ரசி!

கடல் சுறாக்களின் கதைக்கே வருவோம். அவை தனித்தன்மை வாய்ந்த உயிரினங்கள். கனடாவிலுள்ள டால்ஹவுஸி பல்கலைக்கழகத்தின் உயிரியல் பேராசிரியர் ஹேல் வைட்ஹெட், சுறாக்கள் பற்றிய ஆய்வில் ஒரு சூப்பர் தகவலைச் சொல்லியிருக்கிறார். சுறாக்கள், தங்களுக்குள் பாடிக் கொள்ளுமாம்! பார்க்க அழகான பெண் சுறாக்கள் அருகில் போய், ஆண் சுறாக்கள் 'கட்டும் விழிச் சுடரே' என்று பாடுமாம்.

நம் கோடம்பாக்கத்துப் பாடல்கள் போலவே சுறா சூப்பர்ஹிட் பாடல்கள் இரண்டு வருடங்களுக்கு ஒருமுறை மாறுமாம்! நம்பச் சிரமமாய் இருக்கிறதா? கூகுளை வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்கள்.

அந்தச் சுறாக்களைப் போய் குதிக்கச் சொல்லிக் கும்மாளம் போடச் சொல்லிப் பார்ப்பது போலவே, படைப்பாற்றல் மிக்க பல இளைஞர்கள் இயந்திரகதியான வேலைகளில் தங்கள் திறமைகளைத் தொலைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

நடிகர் கமலஹாசன் ஒருமுறை சொன்னார். "ஒரு படம் ஒப்புக் கொள்வதென்றால், அந்த வேலையைச் செய்வது ஜாலியாக இருக்குமா என்று முதலில் பார்ப்பேன். இருக்குமென்றால் ஒப்புக்கொள்வேன்" என்று.

நமக்குப் பிடித்த வேலையை ரசித்துச் செய்யத் தொடங்கும்போது அதில் சீக்கிரமாகவே சிகரங்களை எட்டலாம்.

ஒரு சாகசத்தைச் செய்து முடித்த மறுகணமே கரவொலிக்கு மத்தியில், கரையில் நிற்கும் தன் பயிற்சியாளரிடம் மின்னல் வேகத்தில் நீந்தி வருகிற மீன்கள் வாயை அகலப்



பிளக்கின்றன. அள்ளி அள்ளித் தீனி போட்டதும் அடுத்த சாகசத்திற்குத் தயாராகிவிடுகின்றன.

இன்று பன்னாட்டு நிறுவனங்களின் பயிற்சி மையங்களால் பயிற்சியளிக்கப்பட்டு இயந்திர கதியில் வேலை பார்த்து, மன அழுத்தத்தோடு மாலையில் வெளியே துப்பப்படுகிற சில வேலைகளில் வாலிபர்கள் ஆயிரக்கணக்கில் அகப்பட்டிருக்கிறார்கள்.

தனித்தன்மையும் ஆளுமையும் வெளிப்படும்விதமாக வேலைகள் வாய்ப்பது மிகச் சிலருக்குத்தான்.

'ஸ்ட்ரேஞ்சர்' என்றொரு புகழ் பெற்ற ஆங்கில நாவல். ஆல்பர்ட் கேட்ஸ் என்பவர் எழுதியது. அதிலொரு மரண தண்டனைக் கைதி. வேண்டா வெறுப்பாய் வாழ்க்கையை ஓட்டிக் கொண்டிருக்கும் அவனது பார்வையில், சிறையில் கூரை இடுக்கில் துண்டு ஆகாயம் தென்பட்டது.

அரை நிமிஷ தரிசனம்தான். அது அவனைப் புரட்

டிப் போட்டது. ஆகாயத்தில் அலை வீசும் உயிர்ப்பும், உயிரோட்டமான சக்தியும் அவனை உலுக்கின.

தான் வாழும் ஒவ்வொரு நிமிடத்தையும் உயிர்ப்போடும் உற்சாகத்தோடும் வாழத் தீர்மானித்தான். மணமேடையை எதிர்நோக்கும் ஆவலுடன் வாழ்வை வாழ்ந்தான்.

கடைசி நாளன்று அவனது கடைசி ஆசையைக் கேட்டு, பிரார்த்தனை செய்ய ஒரு மத போதகர் வந்தார். அவர் அதை முழு ஈடுபாட்டோடு செய்யாமல் கடனுக்காகச் செய்வதை அவர் முகம் பார்த்தே உணர்ந்தான் மரண தண்டனைக் கைதி. பிரார்த்தனையின் பெருமிதத்தை உணராத அவரது சேவையை ஏற்க மறுத்து கம்பீரமாய் உயிர் துறந்தான்.

மரண தண்டனை விதிக்கப்பட்ட மனிதனுக்கே வாழ்க்கை இவ்வளவு நம்பிக்கையூட்டுமென்றால், நிகழ்காலத்தின் நிமிஷமாய், வாய்ப்புகளின் வார்ப்புகளாய் வாழ்கிற வாலிபர்களுக்கு வாழ்க்கைமேல் எவ்வளவு வாஞ்சை இருக்க வேண்டும்!

தங்கள் தனித்தன்மை என்னவென்று கண்டறிவதும், அந்தத் தனித்தன்மையை வானம் அளவு வளர்த்துக் கொள்வதும் வாலிபத்தில்தான் சாத்தியம்.

வாழ்வின் விநாடிகளைத் தீவிரமாக வாழத் தொடங்குகிறபோது நம் திறமைகள் கூர்மையடைகின்றன.

தேர்வுக்கும் வாழ்வுக்கும் ஒரு சின்ன வித்தியாசம் உண்டு. தேர்வில் கேட்கப்படும் கேள்விகளுக்கு, நமக்குத் தெரிந்த தகவல்களைப் பதில்களாக்கித் தந்து கொண்டிருப்போம். வாழ்வில் கேட்கப்படும் கேள்விகளுக்கு நாமே பதிலாகி வந்து கொண்டிருப்போம்.

குறுகிய கால ஆதாயத்துக்காக திறமைகளைக் குறுக்கிக்கொண்டு வாலிபத்தை அடகு வைப்பதற்குப் பெயர் வாழ்க்கையல்ல.

நம் திறமைகளுக்கேற்ற துறையில் ரசனையோடு ஈடுபடுவதே வாழ்க்கை. வாழ்க்கையை ரசிக்கிறவர்களே வாழ்க்கையை ஜெயிக்கிறார்கள்.

(தொடரும்)

படம்: ஸ்ரீஹரி

## அருள்வாக்கு

# மாணவச் செல்வங்களே!

மனத்தில் அன்பும் சந்தோஷமும் இருக்கிறபோதுதான் புத்தி தெளிவாக இருக்கிறது. புத்தி தெளிவாக இருக்கிறபோது படித்தால் பாடம் நன்றாக ஏறுகிறது. கோபம், ஆத்திரம், அழுகை, பொறாமை எல்லாம் உண்டாகிற போது புத்தி குழம்பிப் போகிறது. அப்போது படிப்பும் ஏறமாட்டேன் என்கிறது.

தினமும் கொஞ்ச நாழி ஸ்வாமியை பார்வதி - பரமசிவனாகவோ, மகாலக்ஷ்மி - மகாவிஷ்ணுவாகவோ நினைத்துக் கொண்டு விட்டீர்களானால் மனம் நல்லதாக ஆகும்; புத்தியும் தெளிவாக ஆகும். அதனால் படிப்பும் நன்றாக வரும். நன்றாக பாஸ் பண்ணி விடலாம்.

ரொம்பப் புத்திசாலியாக இருந்து நிறைய மார்க் வாங்கி பாஸ் பண்ணினால்கூட, நல்லவன் என்ற பெயரெடுக்காவிட்டால் பிரயோஜனம் இல்லை. நல்ல பெயர் இல்லாவிட்டால் பிற்காலத்தில் வாழ்க்கையில் முன்னேறவே முடியாது. நல்லவனாக இருந்துவிட்டால் அது நமக்கும் சந்தோஷம், மற்றவர்களுக்கும் சந்தோஷம், பெரியவனான பின் வாழ்க்கையில் முன்னுக்கு வருவதற்கும் அதுதான் உதவும்.

நம்மை நல்லவர்களாக, புத்திசாலிகளாக, இரண்டாகவும் செய்வது ஸ்வாமியிடம் நாம் வைக்கிற பக்திதான்.

இந்தச் சின்ன வயதிலிருந்தே ஸ்வாமியைப் பிடித்துக்கொள்ள வேண்டும். இப்போதுதான் அவரைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளவும் முடியும். வயதாக ஆக வேறு பல தினுசான ஆசைகள் எல்லாம் வந்து, ஸ்வாமியை நினைக்கவிடாமல் இடைஞ்சல் செய்யும். இப்போது உங்களுக்கு அந்த இடைஞ்சல் இல்லை. அதனால் இப்போதே அவரிடம் பக்தி வைக்கப் பழகிவிட்டால் அப்புறம்கூட அந்த ஆசைகள் உங்களிடம் வந்து உபத்திரவம் பண்ணாது.

நீங்கள் எல்லோரும் க்ஷேமமாக இருக்க வேண்டும். நிறைய மார்க் வாங்கி, நன்றாய் பாஸ் பண்ணி வாழ்க்கையில் நல்ல நிலைக்கு வர வேண்டும். இதற்கெல்லாம் வழியாக இப்போதிலிருந்தே ஸ்வாமியிடம், அம்மையப்பனிடம் பக்தியோடு இருங்கள்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**



# “எனக்காக பிரார்த்தனை பண்ணுங்க!”

மலையாளத் தோல்விப் படங்களில் நடித்துவிட்டு தமிழகம் வந்தால், இங்கே கனவுக் கன்னி கிரீடம் உறுதி. உதாரணம் மலபார் அழகி அஸின். இங்கிருந்து கேரளம் போய் வெற்றி கொடுத்தால் தமிழ்த் திரையுலகில் டபுள் மரியாதையை அள்ளித் தருவார்கள் என்பதற்கு உதாரணம், உள்ளூர் அழகி அபர்ணா. இவர் நாயகியாக நடித்திருக்கும் 'டிசம்பர்' படம் அங்கே சூப்பர் ஹிட்.

“'டிசம்பர்' படத்தைப் பார்த்துவிட்டு 'எங்கடே பொண்ணு குமாரி, ஓமனே, கள்விழிப் பெண்ணே' இப்படி போன்ல செல்லம் கொஞ்ச ஆரம்பிச்கட்டாங்க. கேரள ரசிகர்கள், நடிகர், நடிகைகளைச் சீண்டக்கூட மாட்டாங்கன்னு கேள்விப் பட்டிருக்கேன். ஆனால் உண்மை அது இல்லை. அன்பு காட்டுறதுல அவங்களும் நம்மள மாதிரிதான்.'' கண்களில் சந்தோஷம் பொங்கச் சொல்லும் அபர்ணா அறிமுகமானது 'புதுக்கோட்டையிலிருந்து சரவணன்' படத்தில்.

''எஸ்.எஸ்.ஸ்டேன்லி டைரக்ஷன், தனுஷ் ஹீரோன்னு அறிமுகப் படமே அமர்க்களமா அமைந்தது என்னோட அதிர்ஷ்டம். அந்தப் படத்துக்கு அப்புறம் கிட்டத்தட்ட எழுபது வாய்ப்புக்கள் வந்தது. அதுலே 'ஏ.பி.சி.டி'யும், 'மாமூ'வும் தான் மனசுக்குப் பிடிச்சது. இப்போ 'ஏ.பி.சி.டி'யிலே 'திவ்யா டெய்ஸி' கேரக்டர்லே என்னைப் பார்த்த பிறகு 'அட இந்தப் பொண்ணுக்கு இவ்வளவு நல்லா நடிக்கத் தெரியுமா'ன்னு கேட்கிறாங்க. இயக்குனர் ஷரவணன்சுப்பையாவுக்கு நன்றி சொல்லியே ஆகணும். டெய்ஸி கமர்ஷியல் கேரக்டர் கிடையாது. எந்தச் சூழ்நிலையிலேயும் அழாத பொண்ணு டெய்ஸி. அழற காட்சியிலே கூட அழாமல் உணர்ச்சியை மட்டும் முகத்துலே காட்டணும்னு கேரக்டரை எனக்குள்ளேயிருந்து வெளிப்படுத்த வெச்ச திறமை முழுக்க முழுக்க டைரக்டரோடது! நானும்கூட நிஜத்துல டெய்ஸி மாதிரி துணிச்சலான பொண்ணுதான்.

மீரா ஜாஸ்மினுக்கு லோகித தாஸ்ன்னு ஒரு சூப்பர் டைரக்டர் கிடைச்சதுனாலேதான் அவங்க தேசிய விருது வாங்க முடிஞ்சது. அதுமாதிரி பவர்ஃபுல் டைரக்டர்ஸ் கிடைக்கணும்னு கடவுள்கிட்டே எனக்காக பிரார்த்தனை பண்ணிக்குங்க'' எனும் அபர்ணாவின் தனிப் பெரும் தகுதி, சென்னையில் பிறந்து வளர்ந்த அசல் தமிழ்ப்பெண்.

''குஷ்பு அக்கா, சிம்ரன் அக்கா இரண்டு பேரும் தமிழ் தெரியாமலே இங்கே வந்து ரூல் பண்ணினாங்க. இப்போ என்னை மாதிரி தமிழ்ப் பொண்ணுங்களும் தைரியமா நடிக்க வந்துட்டோம். இப்போல்லாம் தமிழ்ப் பொண்ணுங்க யாரும் பயந்து பின்வாங்கறதில்லே. மும்பையை விட அழகான பொண்ணுங்க இங்கே இருக்காங்க... தமிழ்ப் பொண்ணுங்களுக்குத்தான் வாய்ப்புத் தரணும்னு கொடி பிடிக்காமல் அவங்களோட ஆரோக்கியமா போட்டி போடணும்'' என்று விட்டுக்கொடுக்கிற அபர்ணாவிடம், ஒவ்வொரு படத்துக்கும் ஏன் இடைவெளி எடுத்துக் கொள்கிறீர்கள் என்று கேட்டதும் சுட்டிக் குழந்தை மாதிரி ஸ்கூலில் சொன்ன ஒரு குட்டிக் கதையை நமக்குச் சொல்ல ஆரம்பித்து விட்டார்.

“ஒரு பெரிய மலை. அதிலேருந்து இரண்டு கற்கள் உருண்டு தரையை நோக்கி வந்துச்சு. ஒரு கல் உருண்டை. இன்னொரு கல் ஒரு பக்கம் தட்டையா இருந்தது. உருண்டையான கல், கிளம்பின வேகத்துலே தடதடன்னு தரையிலே வந்து

விழுந்து நொறுங்கிடுச்சு. ஆனால் ஒரு பக்கம் தட்டையான கல், தங்கித் தங்கி மெல்ல உருண்டு வந்து ஜம்முன்னு ஒரு இடத்தைப் பிடிச்சு உட்கார்ந்துடுச்சு. வளர்ச்சிங்கிறது இப்படித்தான் இருக் கணும்..." கதையைச் சொல்லி முடித்த அபர்ணாவுக்கு எக்கச்சக்க கதையறிவாம்.

"கேமராவுக்குப் பின்னாடி சாதிக் கணும்னுதான் லயோலாவில் விஷுவல் கம்யூனிகேஷன் படித்தேன். நடிக்கிறதைவிட, நடிகர்களை ஆட்டி வைக்கிற வேலையிலேதான் சேலஞ்ச் அதிகம். ஆனால் விதி என்னை அழகிப் போட்டி வடிவத்துல அழைச்சுக்கிட்டு வந்துடுச்சு. ஆனாலும் 'சினிமா மேக்கிங்' மேலே ஒரு காதல் உள்ளுக்குள்ளே இருந் துக்கிட்டு இருக்கு. முதல்லே நல்ல நடிகை, தமிழ்நாட்டுக்குச் செல்ல நடிகைன்னு பெயர் வாங்கணும். அதுக்கப்புறம் ஈரான் படங்கள் மாதிரி, குத்து டான்ஸ் இல்லா மல் உயிருள்ள சினிமா எடுக்கணும்" என்கிறார்.

**• ஸ்ரீ சக்கரம்**

அட்டை, படம்:
**புதூர் சரவணன்**





# அமில மனிதன்!

**ஜா**ன் ஹேகிற்கு விடை கிடைத்தது. ஒரு மனிதன் முழுவதுமாக சல்ஃப்யூரிக் அமிலத்தில் மிச்சமில்லாமல் கரைந்து போவதற்கு 48 மணி நேரங்கள் பிடிக்கும்.

மெக்சுவானை அமிலத்துக்கு அன்பளித்துவிட்டு நேராக மெக்சுவானின் வீட்டுக் கதவைத் தட்டினான். கதவைத் திறந்த மெக்சுவானின் பெற்றோரிடம், தன்னை அவர்களது மகனின் அதியுன்னதமான நண்பன் என்று அறிமுகப்படுத்திக் கொண்டான். கட்டாய ராணுவ பணியைத் தவிர்க்க வேண்டி மெக்சுவான் ஸ்காட்லாந்துக்கு தப்பிச் சென்றுவிட்டதாகக் கதையடித்தான். அவனது அதிர்ஷ்டம், ஜானை அவர்கள் உடனடியாக நம்பினர். அடுத்தடுத்த தினங்களில் மெக்சுவானின் சொத்துக்களை லாகவமாகச் சுருட்டிக் கொண்டான் ஜான். இரண்டே வருடங்கள். ஏழாயிரத்து சொச்ச பிராங்குகளும் சல்லிக்காசுகூட மிச்சமில்லாமல் தீர்ந்து போயின.

டீ, ரொட்டி வாங்கக்கூட காலணா இல்லாத நிலையில் 1947-ல் ஜானுக்கு மீண்டும் அமிலத்தின் நினைவு வந்தது. இந்த முறை அவன் கண்களில் சிக்கியவர்கள் டாக்டர் ஹான்டர்ஸன் மற்றும் அவரது மனைவி ரோஸ். அவர்கள் செய்த தவறு ஜானின் கண்களில் படும்படி செய்தித்தாளில் வீடு விற்பனைக்கு என்று அறிவிப்பு வெளியிட்டதுதான். வீடு வாங்கப்போகிறேன் பேர் வழி என்று அவர்களது வாழ்க்கைக்குள் புகுந்தான் ஜான்.

**பி**ப்ரவரி 12. 'உடனடியாக என் வீட்டுக்கு வாருங்கள் ஒரு முக்கிய விஷயம் பேச வேண்டும்' என்று ஹான்டர்ஸனை அழைத்தான். அரக்கபரக்க ஓடிவந்த ஹான்டர்ஸனை வரவேற்று காபி கொடுத்துவிட்டு ஏதோ பேச்சுக் கொடுத்துக்கொண்டே திடீரென்று பின்னந்தலையில் தாக்கினான். உடனே அவரது மனைவி ரோஸைத் தொடர்பு கொண்டு அவரது கணவர் திடீரென்று மயக்கமடைந்து விழுந்து விட்டதாகச் சொன்னான். எங்கே எங்கே என்று ஓடிவந்த ரோஸையும் அடித்து வீழ்த்தினான்.

இரண்டு பேரைக் கரைப்பதற்குத் தேவையான அமிலம் ஏற்கெனவே வாங்கி வைத்தாகிவிட்டது. பீப்பாய்களும் நிறையவே இருக்கின்றன. அடுத்த இரண்டு நாட்களில் இருவரும் கரைந்துபோயினர்.

நேராக ஹான்டர்ஸனின் வீட்டுக்குச் சென்று ஒரு அங்குலமும் விட்டு வைக்காமல் துழாவித் துழாவிச் சுருட்டிக்

கொண்டான். ஹாண்டர்ஸனின் கையெழுத்தை ஃபோர்ஜரி செய்து அவரது அனைத்து சொத்துக்களுக்கும் தான்தான் ஒரே வாரிசு என்று அறிவித்துக் கொண்டான். ஹாண்டர்ஸன் தம்பதியின் கார், கட்டில், டீப்பாய், தட்டுமுட்டுச் சாமான்கள், பேனா, பென்சில்... ஏன் அவர்கள் வீட்டு நாய்க்குட்டியைக்கூட சட்டபூர்வமாகத் தன்னுடையதாக்கிக் கொண்டான்.

அமிலம் இன்னமும் மிச்சமிருந்தது. சிறிதும் சிரமப்படாமல் தமது பக்கத்து வீட்டு 69வயது ஆலிவ்விடம் திரும்பினான். சிநேகம் பிடித்தாகிவிட்டது. வீட்டுக்குக் கூப்பிட்டாகிவிட்டது. மண்டையில் போட்டாகிவிட்டது. எல்லாவற்றையும் சுருட்டியாகிவிட்டது. பீப்பாய்க்குள் தள்ளியாகிவிட்டது. ஆலிவும் மறைந்துதான் போனார். ஆனால் ஆலிவின் தோழி கான்ஸ்டன்ஸ், ஆலிவை மறந்துவிடவில்லை. தமது வயதான தோழியைக் காணவில்லை என்று புகார் கொடுத்தார். சமீபகாலமாக ஜான் எனும் அண்டை வீட்டுக்காரர் அடிக்கடி ஆலிவின் வீட்டுக்கு வந்துபோவதாகவும் அவன் மீது தமக்குச் சந்தேகம் இருப்பதாகவும் எழுதிக் கொடுத்தார்.

**ஜா**ன் மீதான முதல் புகார் இது தான். இதற்கு முன்னால் அமிலத்தில், மூழ்கிப் போனவர்களைப் பற்றி யாரும் குறைந்த பட்சம் 'காணவில்லை' புகார் கூட கொடுக்கவில்லை. ஜான் வீட்டைச் சம்பிரதாயமாக சோதனை செய்தனர். வெகு சுலபமாக ஆலிவின் நகைப் பெட்டிகள் கைப்பற்றப்பட்டன. இவை மட்டுமல்ல, மெக்சுவான் மற்றும் ஹாண்டர்ஸன் தம்பதியின் உடைமைகளும் கண்டெடுக்கப்பட்டன.

பெரிய பெரிய பீப்பாய்களையும் பாதுகாத்து வைக்கப்பட்ட அமிலத்தையும் கண்டு அதிகாரிகள் முதலில் குழம்பிப்போயினர். அவை எதற்காக என்று தெரிய வந்ததும் அதிர்ந்து போயினர். ஜான் வீட்டுப் பின்புற சாக்கடையிலிருந்து மனித உடல் பாகங்கள் (சரியாகக் கரையாத கழிவுகளை அவன் சாக்கடையில் கொட்டிவிடுவது வழக்கம்) கண்டெடுக்கப்பட்டன.

வசமாக மாட்டிக் கொண்டாகி விட்டது என்று தெரிந்ததும் ஜான் ஏதேதோ சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் உளறத் தொடங்கினான். 'நான் யார், நீங்கள் யார், இவர்களெல்லாம் யார்' என்று தத்துவம் பேசினான். அமிலம் என்றால் என்னவென்றே தெரியாது என்றான். மொத்தத்தில் தன்னை ஒரு மனநோயாளியாகக் காட்டிக் கொள்ள முயன்றான். நீதிமன்றத்தில் அவனது அரிதாரம் கலைக்கப்பட்டது. தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது.



(நிறைந்தது)

மருதன் 8

# மீண்டும் மீண்டும்...!

"நல்லாத்தானே இருந்தாங்க... திரும்பவும் சண்டையா?" கிரிக்கெட் ரசிகர்களின் வாய் இப்போது ஓயாமல் மூணு முணுப்பது இந்த வார்த்தைகளைத்தான். ஓயாது போலிருக்கிறது கங்கூலி - சேப்பல் பிரச்னை. "பணத்தாசையால் கங்கூலி கேப்டன் பதவியிலிருந்து இறங்க மறுத்தார்" என்று சமீபத்தில் 'கார்டியன்' இதழுக்கு சேப்பல் அளித்த பேட்டிதான் லேட்டஸ்ட் புகைச்சல்! இச்சமயத்தில் கங்கூலிக்கு இந்திய டெஸ்ட் அணியிலும் இட மில்லை என்று சூசகமாக அறிவித்துவிட்டது இந்திய கிரிக்கெட் போர்டு.

கங்கூலிக்கு ஏற்பட்டுள்ள அவமானத்தைக் கண்டு கொதித்துப் போயிருக்கிறது ஒட்டுமொத்த வங்காளமும். என்றாலும் உண்மை நிலவரம் கங்குலிக்குச் சாதகமாக இல்லை. ஓப்பனிங் பேட்ஸ்மேன் பிரச்னைக்கு வாசிம் ஜாஃபர் முற்றுப்புள்ளி வைத்துவிட்டார். யுவராஜ் உள்ளே என்றால், கைஃப் வெளியே. லட்சுமணனை வெளியேற்ற யாருக்குமே மனதில்லை. அப்படியே அது நடந் தாலும் அந்த இடத்தைப் பிடிக்க கைஃப்புக்கும் சுரேஷ் ரைனா வுக்கும் பெரிய அடிதடியே நடக்கும். இதில் கங்குலியை எந்த இடத்தில் அமர்த்துவது? பிரச்னையே வேண்டாமென்றுதான் "இனிமேல் அணியில் இளைஞர்களுக்கே முன்னுரிமை" என முன்மொழிந்திருக்கிறார் தேர்வுக் குழுவின் தலைவரான மோரே.

இந்திய கிரிக்கெட்டில் எண்ணற்ற திறமைகள் கொட்டிக் கிடப்பதால் பலருக்கும் இப்பொழுது தலைவலி. கங்கூலி மட்டு மில்லாது அகர்கர், ஜாகீர்கான், கவுதம் கம்பீர், முரளி கார்த்திக் போன்ற இதர வீரர்களின் கதவுகளும் சாதுர்யமாக சாத்தப் பட்டிருக்கின்றன. ஜிம்பாப்வே டூரின்போது சேப்பல் அறிவுறுத் தியபடி கேப்டன் பதவியைத் துறந்து ஆட்டத்தில் மட்டும் கவனம் செலுத்தியிருந்தால் கங்கூலிக்கு இத்தனை சிக்கல்கள் ஏற் பட்டிருக்காது (டெண்டுல்கர் இந்த வழியைத்தான் பின்பற்றினார்) என்கின்றனர்.

'கங்கூலி இனிமேலாவது நிலைமையைப் புரிந்துகொண்டு ஓய்வுபெற வேண்டும்' என்பது கிரிக்கெட் வல்லு நர்களின் கருத்து. "முடியாது. நான் மீண்டும் அணியில் இடம்பெறத்தான் போகிறேன்" என்று கங்கூலி அடம் பிடித்தால் அது இந்திய கிரிக்கெட் அணியின் கவனத்தை திசை திருப்பி வீரர்களைப் பாதிக்கவே செய்யும். என்ன செய்யப் போகிறார் கங்கூலி?

- ச.ந. கண்ணன்





# நடக்குமென்பார்; நடக்கும்!

## 12.3.2006 முதல் 18.3.2006 வரை

**மேஷம்:** நினைத்த காரியம் கைகூடும். வாக்கு, தனம், கல்வி மேலோங்கும். பொருளாதாரச் சிரமம் விலகும். நாணயம் காப்பாற்றப்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். மாணவ / மாணவியர் கல்வியில் மேன்மை பெறுவார்கள். கொடுக்கல், வாங்கல் நற்பலனைத் தரும். நண்பர் / உறவினர் வருகையால் செலவுகள் அதிகரிக்கும். சிலருக்கு வீடு வாங்கும் யோகம் இருக்கிறது. பூர்விகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். சனீஸ்வர வழிபாடு சாலச் சிறந்தது. செவ்வாய்க்கிழமைகளில் முருகப் பெருமானுக்கு ஓர் அர்ச்சனை செய்யவும்.

**ரிஷபம்:** பண வரவு காத்திருக்கிறது. கொடுக்கல், வாங்கல் நல்ல பலனைத் தரும். வராத பணம் கைக்கு வரும். பூர்விகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். நெருங்கிய உறவினர்கள் விலகிச் செல்வார்கள். கூட்டுத் தொழில் செய்பவர்களுள் கருத்து வேற்றுமை ஏற்படும். மனத்தில் தைரியம், தன்னம்பிக்கை மிகுந்து காணும். உடன்பிறந்தவர்களால் அனுகூலம் ஏற்படும். கணவன் – மனைவி உறவு நன்றாக இருக்கும். வியாபாரிகள் தொழில் விரிவாக்கம் செய்வார்கள். வெள்ளிக்கிழமைகளில் பெருமாள் தரிசனம் செய்து வந்தால் சங்கடங்கள் குறையும்.

**மிதுனம்:** தன்னம்பிக்கை மிகுந்து காணப்படும். நினைத்தது நடக்கும். பணக் கஷ்டம் விலகும். வருமானம் மிகுதி ஆகும். வீடு / வாகனம் வாங்க நல்ல தருணம். சுபகாரியம் நடக்கும். வேலையில் மாற்றம் வரும். புதிய வேலை கிடைக்கும். வெளிநாட்டுப் பிரயாணம் போகும்படி இருக்கும். குழந்தைகள் வழியில் சுபநிகழ்ச்சி, சந்தோஷமான விஷயங்கள் நடக்கும். குழந்தை பாக்கியம் உண்டாகும். தொழில்துறையில் நல்ல லாபம் காணும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். மனக்குழப்பம் போகும். ஹயக்ரீவரை வழிபட்டு வரவும்.

**கடகம்** : சொத்துக்கள் பாகப்பிரிவினை ஏற்படும். புதிய வீடு வாசல் முயற்சி பலிதமாகும். வாக்குவன்மை மேலோங்கும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வாகன சுகம் கிட்டும். நண்பர் / உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். எதிரிகள் தொல்லை குறையும்.

தஞ்சை பரத்வாஜ்

## பரத்வாஜ் பதில்கள்

● எனது மகனுக்கு எப்போது திருமணம் நடக்கும்?

- டி.ஜி.ரெங்கராஜன்,
ஹைதராபாத் - 48

உங்கள் மகனுக்கு 2006-ல் திருமணம் நடக்கும். உறவில்லாத இடத்தில், உடன்பிறப்பு இருவர் உள்ள வீட்டில் பெண் அமையும்.

● எனது மச்சினருக்கு எப்போது திருமணம் நடக்கும்?

- எஸ். பாலு,
சென்னை

2006-ல் திருமணம் முடியும். சஷ்டி விரதம் இருக்கவும். பரிகாரம் வேண்டாம்.

● எனது மகனுக்கு எப்போது நல்ல வேலை அமையும்? திருமணம் எப்போது?

- ஏ.கே.பார்த்தசாரதி,
பெங்களூர்

தற்போது ஜாதகருக்கு சந்திர தசை நடக்கிறது. 2006-ல் நல்ல வேலை கிடைக்கும், திருமணம் முடியும். நல்ல பெண் அமைவாள். பெருமாளை வழிபட்டு வரவும்.

உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கொடுக்கல் வாங்கல் நல்ல பலன் அளிக்கும். குடும்பத்தில் சுபச் செலவுகள் ஏற்படும். வியாபாரத்தில் அதிக லாபம் ஏற்படும். திங்கள்தோறும் அம்பிகை வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**சிம்மம்:** வெற்றி வாகை சூடும் வாரம். திருமணத் தடை விலகும். கொடுக்கல் வாங்கல் தாமதத்துக்குப் பின் கைக்குக் கிடைக்கும். தொழில் துறையில் மாற்றம் ரெடி. குடும்ப வாழ்வில், விட்டுக் கொடுத்துப் போவது நற்பலனை அளிக்கும். கைப்பொருள் மீது கவனம் தேவை. யாரிடமும் வாக்கு வாதம் வேண்டாம். வண்டி வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. உத்தியோகத்தில் வேலைப் பளு அதிகரிக்கும். வியாபாரத்தில் மந்தமான சூழ்நிலை நிலவும். ஆரோக்கியத்தில் கவனம் வைக்கவும். மாணவ / மாணவியர் படிப்பில் கவனம் செலுத்தவும். ஞாயிறுதோறும் சிவன் வழிபாடு செய்து வரவும்.

**கன்னி:** வாக்குவன்மை மேலோங்கும். பொருளாதாரச் சிரமம் விலகும். கணவன் - மனைவி அனுசரணையாக நடந்து கொள்வது உத்தமம். மனசலனம் போகும். திருமணக் காரியம் நிறைவேறும். உத்தியோகத்தில் முன்னேற்றம் கிட்டும். பணகஷ்டம் விலகும். குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வியாபாரத்தில் முன்னேற்றம் காணும். தூரதேச அழைப்பு வரும். கொடுக்கல், வாங்கல் நல்ல பலனைத் தரும். ரெங்கநாதரை வழிபாடு செய்யவும்.

**துலாம்:** நட்புகள் தொடரும். பண விருத்தி ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். திருமணக் காரியம் நடக்கும். கொடுக்கல், வாங்கல் நற்பலனைத் தரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் கிட்டும். மனப் பிரமை தீரும். கணவன் - மனைவி உறவு பலப்படும். மாணவ / மாணவியர் கல்வியில் முன்னேற்றம் அடைவர். வழக்கு / வியாபாரம் வெற்றி அளிக்கும். வீடு வாங்க நல்ல நேரம். சுக்ரனுக்கு வெள்ளிதோறும் தீபம் ஏற்றவும்.

**விருச்சிகம்:** மனச்சலனம் போகும்.

• எனது பையனுக்குத் திருமணம் எப்போது நடக்கும்?

- விசு,
பெங்களூர் - 3

தங்கள் பையனுக்கு குருதசை நடக்கிறது. உறவில்லாத இடத்தில் பெண் அமையும். 2006-ல் திருமணம் நடக்கும். பரிகாரம் வேண்டாம்.

• என் மகனின் திருமணம் பற்றிக் கூறவும்...?

- ஏ. ராஜகோபாலன்,
ஏற்காடு

உங்கள் மகனுக்கு புதன் தசை குரு புத்தி நடக்கிறது. 2006-ல் திருமணம் முடியும். பரிகாரம் வேண்டாம்.

பொருளாதாரம் பலப்படும். கணவன் - மனைவி உறவு நற்பலனைத் தரும். சுபச் செலவுகள் ரெடி. புதிய முயற்சிகள் கைகூடும். குழந்தைகள் இடம்மாறிச் செல்வார்கள். நண்பர் / உறவினர்களால் ஆதாயம் கிடைக்கும். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். நீண்ட தூரப் பிரயாணம் செல்ல நேரிடும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். திடீர் தனப்ராப்தி ஏற்படும். முருகப் பெருமானை வழிபாடு செய்வது சாலச் சிறந்தது.

**தனுசு:** தொழில்துறையில் முன்னேற்றம் அடையும் வாரம். வீடு / வாகனம் / புதிய தொழில் ஆரம்பிக்க நல்ல தருணம். தனம், வாக்குவன்மை, கல்வி மேலோங்கும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். உடல்நிலையில் முன்னேற்றம் ஏற்படும். எதிர்பாராத பிரயாணம் செய்ய நேரிடும். செலவுகள் பயனுள்ளதாக இருக்கும். மகப்பேறு உண்டாகும். உத்தியோகத்தில் நல்ல மாறுதல் கிடைக்கும். வேலைப்பளு குறையும். மாணவ / மாணவியர் படிப்பில் மேலோங்குவர். வழக்கு வெற்றி பெறும். குருப்ரீதி செய்து வரவும்.

**மகரம்:** எண்ணிய எண்ணங்கள் யாவும் ஈடேறும். பொருளாதார கஷ்டம் விலகும். கல்வியில் மேன்மை கிட்டும். நீண்டதூரப் பிரயாணம் அமையும். வீடு / வாகனம் வாங்க நல்ல தருணம். கணவன்-மனைவி உறவு நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் உயர்வு கிட்டும். மாற்றம் வரும். எதிர்ப்பு தொல்லை விலகும். வழக்கு வெற்றி கொள்ளும். செலவுகள் பயனுள்ளதாக இருக்கும். ஆஞ்சநேயர் வழிபாடு சிறந்தது.

**கும்பம்:** பண வரவு ரெடி. வாக்கு வன்மை மேலோங்கும். கல்வியில் மேன்மை கிட்டும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. எதிரிகள் தொல்லை குறையும். ஆரோக்கியத்தில் கவனம் தேவை. யாரிடமும் வாக்கு வாதம் செய்ய வேண்டாம். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. வண்டி வாகனத்தில் போகும்போது கவனம் தேவை. யாருக்கும் ஜாமீன் போட வேண்டாம். உத்தியோகத்தில் மாறுதல் ஏற்படும். குழந்தைகளால் சந்தோஷம் கிட்டும். பத்திரிகைகளில் பெயர் வரும். அந்நியநாட்டு மனிதர்களால் அனுகூலம் ஏற்படும். ஆஞ்சநேயர் காயத்ரி படித்து வரவும்.

**மீனம்:** மனதில் புதுத் துணிவு ஏற்படும். மனக்குழப்பம் விலகும். வேலைப்பளு அதிகரிக்கும். சகோதரர்களால் நல்லது நடக்கும். உத்தியோகத்தில் உயர்வு, பண உயர்வு ஏற்படும். வீடு / வாகனம் வாங்க நல்ல தருணம். குழந்தைகளால் சந்தோஷம் கிட்டும். எதிரிகள் தொல்லை குறையும். சுபநிகழ்ச்சிகள் நடக்கும். கொடுக்கல், வாங்கல் நல்ல பலனைத் தரும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. ராகு / கேது / குரு வழிபாடு செய்து வருதல் நல்லது. ○



**கா**லையில் அந்தச் செய்தியைக் கேட்டதும் அதிர்ச்சியாக இருந்தது. பக்கத்து வீட்டு சாம்பசிவம் முந்தைய நாளிரவு ஹார்ட் அட்டாக்கில் திடீரென்று போய் விட்டாராம். சாம்பசிவத்தின் மூத்த பெண் கமலா மூன்று தெரு தள்ளி வசிக்கிறாள். அவள் வந்து காலையில் கதவைத் தட்டியபோது பதிலே இல்லையாம்.

ஒரு காலத்தில் ஓஹோவென்று பிசினஸில் கொடிகட்டிப் பறந்தவர். சில ஆண்டுகளுக்கு முன் பிசினஸ் நொடித்துப் போய், சொத்துக்கள் எல்லாம் கரைந்து போக, எஞ்சியது அவருடைய பங்களா மட்டுமே! பக்கத்து வீட்டுக்காரராக இருந்தாலும் எங்களுக்கும் அவருடைய குடும்பத்தினருக்குமிடையே அவ்வளவாகப் பழக்கமில்லை. பல ஆண்டுகளுக்கு முன்பே மனைவியை இழந்த அவர், தன்னுடைய பிள்ளை, பெண்களின் நலனை முன்னிட்டு மறுமணம் செய்து கொள்ளவில்லை. தவிர, அதைப் பற்றிய நினைவு எழாவண்ணம், பிசினஸில் முழு நேரமும் மூழ்கியிருந்தார். மூத்த பிள்ளைக்கும், மற்ற இரு பெண்களுக்கும் திருமணமாகி, அவர்கள் பிரிந்து சென்ற பின்பும், சாம்பசிவம் அவர்கள் யாரையும் அண்டியிருக்காமல், தன் சொந்த வீட்டில் தனிமரமாக இருந்து வந்தார். சில ஆண்டுகளுக்கு முன்னர் பிசினஸிலும் நஷ்டம் ஏற்பட, தன் தனிமையைப் போக்க ஒரு நாயை மட்டும் வளர்த்து வந்தார்.

# ஒரே பாய்ச்சல்!

கௌண்டின்யன்



என் பெற்றோர் ஏதோ திருமணத்திற்காக கோவை சென்றிருந்ததால், நான் மட்டும் மெதுவாகத் தயங்கிக்கொண்டே துக்கம் விசாரிக்கச் சென்றேன். என்னைப் போல் வேறு சிலரும் வீட்டுக்குள் நுழைந்து கொண்டிருந்தனர். வீட்டு வாசலில் கட்டப்பட்டிருந்த நாய், கயிற்றை அறுக்க முயற்சி செய்துகொண்டு, நிலைகொள்ளாமல் தவித்தது. என்னைக் கண்டதும் தன் முன்னங்கால்களைத் தூக்கி ஓலமிட்டது. வீட்டு ஹாலில் நடுப்பகுதியில் சாம்பசிவத்தின் உடல் கண்ணாடிப் பெட்டிக்குள் கிடத்தப்பட்டிருந்தது. கமலா ஒரு மூலையில் சில பெண்களுடன் அமர்ந்திருந்தாள்.

வந்திருந்தவர்கள் அவளிடம் எப்படி இறந்தார், என்ன நடந்தது என்று சம்பிரதாயமாக விசாரித்துக் கொண்டிருந்தனர். என் பங்குக்கு அவளிடம் சென்று மெதுவாகத் தொண்டையைக் கனைத்தேன். என்னைக் கண்டதும் அவள் முகத்தில் தோன்றியது குழப்பமா, ஆச்சரியமா?

"நீங்க... பக்கத்து வீட்டுப் பிள்ளை தானே!"

"ஆ... ஆமாம்.. நான்... உங்க அப்பா... பாவம்... இப்படி திடீர்னு..." என்று திக்கித் திணறினேன். அவள் அழுதால், அவளுடன் சேர்ந்து அழ, என் கண்களில் கண்ணீர் முட்டி நின்றது.

"என்ன பண்ணுறது? ஹார்ட் அட்டாக்கிலே திடீர்னு போயிட்டார்!"

நல்லவேளை! அந்தச் சிரமத்தை அவள் எனக்கு அளிக்கவில்லை. என் கண்ணீர் வெளியே வராமல் கண்களுக்குள் பதுங்கிக் கொண்டது.

"காபி சாப்பிடுங்க! வேலம்மா, இவருக்கு காபி கொடு!"

இவள் எப்படி நிச்சலனமாக அமைதியாக இருக்கிறாள்? இதயத்தில் எங்கோ ஒரு மூலையில் எனக்கு வலித்தது. எங்கிருந்தோ கமலாவின் கணவர் செல்போனுடன் ஆஜரானார். "கமலா, உன் அண்ணா ஃபிளைட்டில் வருகிறார். வைஃப் வரலையாம்! பதினொரு மணிக்கு வந்துடுவார். உன் தங்கையும், வீட்டுக்காரரும் காரிலே வராங்க. ஆவடியைத் தாண்டியாச்சு. இன்னும் டென் மினிட்ஸ் தான்!"

"வரும்போது மெதுவா வரட்டும்!" என்று கமலா சூள் கொட்டினாள்.

சாம்பசிவத்தின் அருகில் யாருமில்லை. வந்தவர்கள் ஒரு நிமிடம் அவரைப் பார்த்துவிட்டு மூலையில் ஒதுங்கிக் கொண்டு தங்களுக்குள் வேறு பல விஷயங்களை மெல்லிய குரலில் பேசினர்.

"அடடா! அந்த நாய் ஏன் இப்படி ஊளையிடறது? தலை வேதனையா இருக்கு. வேலம்மா... அதுக்குப் பசியோ என்னமோ! கொஞ்சம் பிஸ்கட் போடு! நாமதான் சாப்பிட முடியாது!"

"குழந்தைக்குப் பசிக்கறதே!"

"சின்ன குழந்தைக்கெல்லாம் டிபன் ஏற்பாடு பண்ணியிருக்கு. பெரியவங்களும் வேணும்னா போங்க! யார்



"மெகா சீரியல்லே நடிக்கும்போது கிளிசரின் போடாமலேயே நீங்க கண்ணீர் விடுறீங்களே... எப்படி?"

"தயாரிப்பாளர் தர வேண்டிய சம்பள பாக்கியை அப்ப நினைச்சுக்குவேன்."

- தஞ்சை தாமு

போனாலும் வந்தாலும், வயிறுன்னு ஒண்ணு இருக்கே!"

"இந்தாங்க! பாடி எடுக்கறதுக்கு முன்னே, வீட்டிலே சாப்பிடக் கூடாதுங்க. வெளியிலே போயி சாப்பிட்டுட்டு வருவோம்!"

சூழ்நிலையின் இறுக்கம் தாளாமல் வாசலுக்கு வந்தேன். வேலம்மாள் நாய்க்கு ஒரு பாக்கெட் பிஸ்கட்டைப் பிரித்துப் போட, நாய் அதைத் தொடவேயில்லை. அவளை நோக்கி தன்னுடைய மொழியில் ஏதோ வேண்டியது.

"தா... பசின்னா இதைத் துன்னு தொலையேன்! இன்னா வேணும் ஒனக்கு?" சற்றைக்கெல்லாம் ஒரு கார் வந்து நின்றது. அதிலிருந்து ஒரு பெண்ணும், கூட வருவது அவள் கணவராய்த்தானிருக்கும். இருவரும் பரபரப்புடன் நுழைந்தனர். ஓகோ! இதுதான் பெங்களூரிலிருக்கும் சாம்பசிவத்தின் இரண்டாவது பெண்! இதுவரை மூத்தவள் கதறி அழாததற்குக் காரணம், தன் துக்கத்தைப் பகிர்ந்துகொள்ள நெருங்கிய உறவினர் இல்லாததுதான்! உடன் பிறந்தவளைக் கண்டதும் இதுவரை அடக்கியிருந்த துக்கம் அவளுக்குப் பீறிட்டுக் கிளம்பப் போகிறது.

ஆனால் ஏதேதோ பேச்சுக்குரல்கள் கேட்டன. அழுகையொலி எழவில்லை. மெதுவாக உள்ளே நுழைந்து சகோதரிகளின் அருகில் சென்றேன்.

"புவனா! டாக்சியிலா வந்தே!"

"இல்லை. எங்களோட புது சான்ட்ரோவில் வந்தோம். அவரே டிரைவ் பண்ணினார்."

"உன்னோட மாருதி என்னாச்சு?"

"பழசாயிடுத்து. பழசாப் போனதை வைச்சுண்டு என்ன லாபம்? அதை டிஸ்போஸ் பண்ணிட்டு, சான்ட்ரோ வாங்கினோம். ஆமா, நீ ஏன் புதுசு வாங்கலை?"

"பணத்துக்கு எங்கே போறது? பிசினஸ் நல்லா போயிண்டு இருக்கிறபோதே நம்ம இரண்டு பேருக்கும் அப்பா நிறைய செஞ்சிருக்கலாம். எல்லாத்தையும் பிசினஸ்லே கோட்டை விட்டார். நமக்கு தர்றதுக்கு பணம் இல்லாமப் போச்சு!"

"மனசில்லேன்னு சொல்லு! இந்த வீட்டை வித்து பணத்தை நமக்குத் தந்திருக்கக் கூடாதா? இப்ப வீட்டை கூடவா கொண்டு போனார்! கடைசிவரைலே, பெண்களுக்கு எதுவும் தராம மோசம் பண்ணிட்டார்."

இதயத்தில் ஒரு மூலையில் தோன்றிய வலி எனக்கு மெதுவாகப் பரவியது. மேலும் அவர்களுடைய உரையாடலைக் கேட்க விரும்பாமல், மாப்பிள்ளைகள் இருவரும் நின்று கொண்டிருக்கும் இடத்தை அணுகினேன்.

"பேசாம இந்த வீட்டை பில்டர்ஸ் கிட்டே தள்ளியிருந்தா, நாலு பெரிய ஃப்ளாட் கிடைச்சிருக்கும். அதையும் பண்ணாமப் போய்ச் சேர்ந்தார்."

"உங்கிட்ட சொல்றதுக்கென்ன! பிசினஸ்லே இவரோட பொசிஷனைப் பார்த்துத்தான் நான் இந்த வீட்லே சம்பந்தம் பண்ணிண்டேன். எல்லாம் புஸ்வாணமாப் போயிடுத்து!"

சரிதான்! இந்த வீட்டில் எல்லோருக்கும் ஏதாவது ஒரு குறை இருக்கும் போலுள்ளது. ஆனால் அதையெல்லாம் இந்தச் சந்தர்ப்பத்திலா காட்ட வேண்டும்? திடீரென்று வீட்டில் பரபரப்பு! மூத்த பிள்ளை முரளியும் வந்து விட்டான். வந்தவன் மௌனமாக நேரே தன் தந்தையின் அருகே சென்று, மீளா உறக்கத்தில் ஆழ்ந்திருந்தவரை சில வினாடிகள் பார்த்தான். அவ்வளவுதான்! பிறகு அங்கிருந்து நகர்ந்து தன் சகோதரிகளுடனும், மாப்பிள்ளைகளுடனும் உரையாடத் தொடங்கினான். இவனாவது தன் சகோதரிகளிடமிருந்து மாறுபட்டு இருப்பான் என்று நான் எதிர்பார்த்தது தவறு. ஆண்கள் பொதுவாக பெண்களைப் போல் கதறி அழுவதில்லைதான்! ஆனால் இழப்பின் சோகம் முகத்தில் தெரியாமலா இருக்கும்?

"வா... முரளி! ஃப்ளைட் டைமிலே வந்துதா? வைஃப் வரலியா?"

"வரலை... ஆமாம், என்ன ஆச்சு திடீர்னு?"

"அண்ணா, நீ காரியமெல்லாம் முடிஞ்சப்புறம்தானே போவே!"

"இல்லை புவனா! நான் நாளைக்கே திரும்பிப் போகணும். பத்தாம் நாள் கிரியைக்குத் திரும்பி வரேன்!"

"உங்கிட்ட சில முக்கியமான விஷயங்கள் பேசணும். இன்னிக்கு நைட்டே பேசிடலாமா? எல்லாம் இந்த வீட்டைப் பத்தித்தான்!"

என் இதயம் முழுவதுமே இப்போது வலித்தது. இறந்தவர்களின் ஆன்மா வீட்டைச் சுற்றிச் சுற்றி வரும் என்று என் அம்மா சொல்வதுண்டு. தன்னுடைய பிரிவால் அழுகிறவர்களுடைய கண்ணீரைப் பார்த்து அது திருப்தி அடையுமாம்! அது உண்மையானால், பெரியவருடைய ஆன்மாவுக்குக் கண்டிப்பாக சாந்தியே கிடைக்காது. ச்சே, என்ன மனிதர்கள் இவர்கள்!

**ம**ளமளவென காரியங்கள் நடந்தன. சாம்பசிவம் இறுதி யாத்திரைக்குத் தயாராகி விட்டார். அவருடைய உடல் வீட்டுக்கு வெளியே கொண்டுவரப்பட்டது. மாருதி வேனில் சடலத்தை ஏற்றுவதற்கு முன், எல்லோரும் இறுதி மரியாதை செலுத்தினர். அந்தக் கடைசி தருணத்தில் கூட அவர் பெற்ற செல்வங்களின் கண்களில் ஒரு சொட்டுக் கண்ணீர் கூட இல்லை. அவர் வளர்ப்பு நாய் மட்டும் பெரிதாகக் குரல் கொடுத்து ஓலமிட்டது.

அடடா! தனக்குப் போட்ட பிஸ்கட் எதையும் சாப்பிடாமல் அது ஏன் இப்படித் தவிக்கிறது? ஆகா! அதனுடைய உணர்ச்சிகள் யாருக்கும் புரியாமல் போய் விட்டதே! இறுதி மரியாதை செலுத்த அதற்கு ஒரு சந்தர்ப்பம் தர வேண்டாமா? உடனே நான் விரைந்து சென்று அதைக் கட்டியிருந்த சங்கிலியை அவிழ்த்து விட்டேன். ஒரே பாய்ச்சலில் பாய்ந்து சென்ற அந்த நாய், சாம்பசிவத்தின் மேல் புரண்டு புரண்டு விழுந்து அழுதது. அதன் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வடிந்தது. சாம்பசிவத்தின் ஆன்மா சாந்தியடைய அது போதும்! ○



டீ.வியில் எந்தளவுக்கு வாய்ப்புகள் கிடைக்கிறதோ அதற்குச் சமமாக பெரிய விழாக்களில் நிகழ்ச்சித் தொகுப்பாளராகவும் கலக்கி வருகிறார் காமெடி டைம் அர்ச்சனா. இதனால் மேடம் சனி, ஞாயிறிலும்கூட பிஸி.

பெப்ஸி உமாவுக்கு அரசியல் ஆர்வம் அதிகமுண்டு. அரசியல் தொடர்பான நிகழ்ச்சிகள் செய்வதை தமது அடுத்த திட்டமாக வைத்திருக்கிறார்.

பரதத்தின் மீது அதீத காதல் கொண்டுள்ள காவ்யா, சீரியல்களுக்கு இடையே கிடைக்கும் நேரத்தில் 'தகதிமிதா'வை மறக்காமல் கற்றுக் கொள்கிறார்.

சன்னில் காலையில் ஜோசியம் சொல்லும் விஷாலின் நிஜப்பெயர் விசாலாட்சி. அதேபோல சன் மியூசிக் காஜலின் உண்மையான பெயர் த்மிழ்ச்செல்வி.

எஸ்.எஸ். மியூசிக் ஸ்ரேயாவின் மாதச் சம்பளம் இரண்டு லட்சம்

• அதீத காதல்!



# பெப்ஸி

என்று சொல்லப்படுகிறது.

**ச**ன் மியூசிக் அனிஷாவுக்குப் பிடித்த நடிகர் சூர்யா. தம்முடைய நிகழ்ச்சியில் சூர்யா பாடல் வந்தால் குஷியாகி யூனிட்டில் இருப்பவர்களுக்கு சாக்லெட் கொடுப்பாராம்.

**ப்**ரஜனும் ஆனந்த கண்ணனும் பெண் காம்பியர்களுடன் இணைந்து நிகழ்ச்சி செய்யும் போது, தமக்கு இணையான பெண் கூடி காம்பியர் கிடைக்கவில்லையே என்கிற வருத்தத்தில் இருக்கிறார் பிளேடு தீனா.

'**வ**ணக்கம் தமிழகம்' ரேவதி, காம்பியரிங் செய்து கொண்டே சாஃப்ட்வேர் இன்ஜினியராகப் பணி புரிந்து வருகிறார்.

**- செந்தில்**

படங்கள்: **ஸ்ரீஹரி, அஜீத்**

• சாக்லெட் பெண்ணே!

# ...மாவின் அடுத்த திட்டம்!

ஒருவன் நம்பத்தகாத நிகழ்ச்சி எதையேனும் கூறினால், "என்னப்பா கதை சொல்லுகிறாயே?" என்கிறோம். "இதென்ன கதையா இருக்கிறதே", "என்னடா, கதை அளக்கிறாய்?" என்றெல்லாம் அடிக்கடி காதில் விழக் கேட்டிருக்கிறோம். இவற்றிலிருந்து, கதை என்றால் எளிதில் நம்ப முடியாத அபூர்வமான நிகழ்ச்சிகளடங்கியதாக இருக்கும் என்று எதிர்பார்க்கத் தோன்றுகிறது.

அதே சமயத்தில், கதைகளைப் பற்றி விமர்சனம் எழுதும் பொல்லாத மனிதர்கள் இருக்கிறார்களே, அவர்கள் கதையில் வரும் ஒவ்வொரு சம்பவமும் வாழ்க்கையில் நடைபெறக் கூடியதாக இருக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள்.

"அது அப்படி நடந்திருக்க முடியாது."

"இது இவ்வாறு ஒரு நாளும் நடந்திராது."

"இந்தச் சம்பவம் இயற்கையோடு பொருந்தியதில்லை."

"அந்த நிகழ்ச்சி நம்பக் கூடியதன்று" என்றெல்லாம் எடுத்துக்காட்டி, "ஆகையால் கதை சுத்த அபத்தம்! தள்ளு குப்பையில்!" என்று ஒரே போடாய்ப் போட்டு விடுகிறார்கள்.

விமர்சகர்கள் இப்படிச் சொல்கிறார்களே என்பதற்காகக் கதை ஆசிரியர் வாழ்க்கையில் நடைபெறும் சாதாரண நிகழ்ச்சிகளையே அப்பட்டமாக எழுதிக்கொண்டு போனால், படிக்கும் ரஸிகர்கள் "நடை நன்றாய்த்தானிருக்கிறது. போக்கும் சரியாகத்தானிருக்கிறது. ஆனால் கதை ஒன்றுமேயில்லையே?" என்று ஏமாற்றமடைகிறார்கள். முன்னால் அவ்விதம் சொன்ன விமர்சகர்களும் ரஸிகர்களுடன் சேர்ந்துகொண்டு, "உப்பு சப்பு இல்லை. விறுவிறுப்பு இல்லை. இதற்குக் கதை என்று பெயர் என்ன கேடு? தள்ளு குப்பையில்!" என்று சொல்லி விடுகிறார்கள்.

என் சொந்த அனுபவத்தில் நான் கண்டும் கேட்டும் தெரிந்து கொண்டிருப்பது என்ன வென்றால், வாழ்க்கையில் உண்மையாக நிகழும் பல சம்பவங்கள் கதை ஆசிரியர்கள் புனையும் அபூர்வக் கற்பனைகளைக் காட்டிலும் மிக அதிசயமானவை என்பதுதான். ஒரு சாதாரண உதாரணத்தைச் சொல்லுகிறேன்:-

"இராமச்சந்திரன் தன் தோழன் முத்துசாமியைத் தேடிக் கொண்டு மயிலாப்பூருக்குப் புறப்பட்



டான். முத்துசாமி மயிலாப்பூரில் ஏதோ ஒரு சந்தில் வாடகை வீட்டில் இருக்கிறான் என்று மட்டும் அவனுக்குத் தெரியுமே தவிர, சரியான விலாசம் தெரியாது. அன்றைக்கு மயிலாப்பூரில் அறுபத்து மூவர் உற்சவம் என்பதும் இராமச்சந்திரனுக்குத் தெரியாது. மயிலாப்பூரில் நாலு மாடவீதிகளிலும் ஒரு லட்சம் ஜனங்கள் அன்று கூடி இருந்தார்கள்.

'இராமச்சந்திரன், 'இன்றைக்குப் பார்த்து வந்தோமே? என்ன அறிவீனம்! முத்துசாமியையாவது இந்தக் கூட்டத்தில் இன்று கண்டுபிடிக்கவாவது?' என்று எண்ணிக்கொண்டு வந்த வழியே திரும்பிப் போகத் தீர்மானித்தான். கூட்டத்தில் புகுந்து முண்டியடித்து அவன் போய்க் கொண்டிருந்தபோது, யாரோ ஒருவன் பேரில் தடால் என்று முட்டிக் கொண்டான். 'அட, ராமச்சந்திரா!' என்று குரலைக் கேட்டு நிமிர்ந்து பார்த்தால் அங்கே சாக்ஷாத் முத்துசாமி நின்று கொண்டு பல்லை இளித்தான்!"

இவ்வாறு ஒரு கதையில் 'எழுதினால் விமர்சகர்கள் பிய்த்து வாங்கிவிடுவார்கள். "ஒரு லட்சம் ஜனங்கள் இருந்த கூட்டத்தில் இராமச்சந்திரன் முத்துசாமியின் மேலேதானா முட்டிக்கொள்ள வேண்டும்? அது எப்படிச் சாத்தியம்? நம்பக் கூடியதாயில்லை" என்று ஒரேயடியாய்ச் சாதிப்பார்கள். ஆனால் மேற்கூறியது என் சொந்த அனுபவத்திலேயே நடந்திருக்கிறது. அதைக் காட்டிலும் பன்மடங்கு வியப்பளிக்கக்கூடிய அபூர்வ சம்பவங்களும் நிகழ்ந்திருக்கின்றன. நீங்கள் ஞாபகப்படுத்திக்கொண்டு பார்த்தால் உங்கள் ஒவ்வொருவருடைய அனுபவத்திலும் இம்மாதிரி எத்தனையோ நிகழ்ந்திருக்கும்.

ஆனாலும் அவற்றையெல்லாம் கதைகளில் அப்படியே எழுதினால், "ஒரு நாளும் நடந்திருக்க முடியாத சம்பவங்கள்" என்று விமர்சகர்கள் சொல்லுவார்கள். நீங்களும் நானும் அவர்களை ஆமோதித்து "கதை இயற்கையாக இல்லை!" என்று சொல்லி விடுவோம்.

ஆகவே கதை எழுதும் ஆசிரியர் கத்தியின் விளிம்பின் மேலே நடப்பதைக் காட்டிலும் கடினமான வித்தையைக் கையாள வேண்டியவராகிறார்.

# அட, ராமச்சந்திரா!

கதையில் உள்ளத்தைக் கவரும் நிகழ்ச்சிகளும் வர வேண்டும். அதே சமயத்தில் "இப்படி நடந்திருக்க முடியுமா?" என்று சந்தேகத்தை எழுப்பக்கூடிய நிகழ்ச்சிகளையும் விலக்க வேண்டும்.

பிரத்தியட்சமாகப் பார்த்த உண்மையான நிகழ்ச்சிகளாயிருக்கலாம். ஆனால் படிக்கும்போது, "இது நம்பக்கூடியதா?" என்று தோன்றுமானால், கதை பயனற்றதாகி விடுகிறது.

சுருங்கச் சொன்னால், கதையில் கதையும் இருக்க வேண்டும். அதே சமயத்தில் அது கதையாகவும் தோன்றக் கூடாது!

அமரர் கல்கி

- 'படித்தேன்... ரசித்தேன்...' நூலிலிருந்து... வானதி பதிப்பகம்




குடியரசுத் தலைவர் டாக்டர் அப்துல் கலாம் 2006-ம் ஆண்டு குடியரசு தின முன் மாலையில் இந்திய மக்களுக்கு ஓர் அற்புதமான உரை நிகழ்த்தினார். சிறு வயதில் தன் தந்தையும் தன் ஆசிரியரும் எப்படி அவருக்கு வழிகாட்டிகளாக இருந்தார்கள் என்பதை இரண்டு எளிய சம்பவங்கள் மூலம் சொன்னார். தந்தை ராமேஸ்வரம் பஞ்சாயத்து போர்டு சேர்மனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டபோது, சிறுவன் கலாம் வீட்டில் உரத்த குரலில் பாடம் படித்துக் கொண்டிருந்தார். தந்தை தொழுகைக்குப் போயிருந்தார். யாரோ வந்து ஒரு தாம்பாளத்தில் பலவித அன்பளிப்புகள் கொண்டு வந்து கொடுக்க விரும்ப, கலாம் அதை வைத்துவிட்டுப் போகும்படி சொன்னார். 'தந்தை திரும்பி வந்ததும் என்னை முதன்முதலாக அடித்தார். இதை வாங்கி வைத்தது தப்பு. ஒருவரிடம் அன்பளிப்பு பெறும்போது அவருக்கு நாம் ஒரு விதத்தில் அடிமையாகி விடுகிறோம்' என்றார். இந்தச் சம்பவம் என் வாழ்வில் ஒரு வழிகாட்டியாக மனத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டது. அடித்ததற்குப் பரிகாரமாக தந்தை என்னை அணைத்தும் கொண்டார். அதேபோல் கலாமுடைய ஆசிரியர் சிவசாமி ஐயரிடம் 'பறவைகள் எப்படிப் பறக்கின்றன' என்று சந்தேகம் கேட்டபோது, கடற்கரைக்குச் சென்று அங்கு பறக்கும் பறவைகளை கவனிக்கச் சொன்னார். கலாமுக்கு ராக்கெட் இயலில் ஆர்வம் அப்போது வித்திடப்பட்டது. மனுஸ்மிருதி, திருக்குரான், திருக்குறள் போன்ற பல நூல்களிலிருந்து மேற்கோள் காட்டின கலாம், ஒருமுறை மங்களூரில் ஒரு

# சாகசமாயிரம்!

பள்ளிப் பிள்ளை அவரிடம் கேட்ட கேள்வியைக் குறிப்பிட்டார். 'நம் நாட்டில் ஊடுருவிப் பரவியிருக்கும் லஞ்சத்தை எப்படி ஒழிப்பது?' என்று கேட்டதாம் அந்தப் பிள்ளை. "இளம் மனதிலிருந்து எழும் கேள்வி, இதற்குச் சரியாகப் பதில் சொல்ல வேண்டியிருந்தது. இந்தியாவில் நூறு கோடி மக்கள், சுமார் இருபது கோடி இல்லங்கள். இந்த இல்லங்களில் பெரியவர்கள் ஒளிவு மறைவில்லாமல் இருக்க வேண்டும். 'உங்கள் பெற்றோர் லஞ்சம் வாங்கினால் நீங்கள் அவர்களை ஏன் அப்படிச் செய்கிறீர்கள்?' என்று கேட்க வேண்டும். உங்கள் அன்பால் அவர்கள் மனம் மாறலாம். கேட்பீர்களா?- என்று மாணவ மாணவியரைக் கேட்டேன். ஒருமித்த குரலில் 'செய்வோம்' என்று பதில் வந்தது. பெற்றோர்களின் கூட்டத்தில் இந்தக் கேள்வியைக் கேட்டபோது தயக்கமாகத்தான் பதில் வந்தது" என்றார் கலாம்!

டாக்டர் கலாம் இந்தியாவை 2020-க்குள் முன்னேறிய நாடாக்க, வழிகாட்டியாக டெக்னாலஜியில் என்ன என்ன செய்யவேண்டும் என்று தெளிவான ஒரு பட்டியல் தந்தார். அதில் முக்கியமான ஒன்று, 'நானோ டெக்னாலஜி' முறைகளைப் பயன்படுத்தி சோலார் செல்களின் ஆற்றலை 15 விழுக்காட்டிலிருந்து 45 விழுக்காடாக பத்து வருஷத்தில் உயர்த்துவதை ஒரு குறிக்கோளாகச் சொன்னார். 'நானோ டெக்னாலஜி' ஆராய்ச்சிக்கு நிதி ஒதுக்க வேண்டும் என்று அவர் அடிக்கடிச் சொல்லி வருகிறார்.

'நானோ டெக்னாலஜி என்பது என்ன என்று அறிந்து கொள்வோம். பிரமிப்பூட்டும் இந்த எதிர்கால தொழில்நுட்பம் ஏறக்குறைய சைன்ஸ் ஃபிக்‌ஷனுக்கு அருகில் நம்மைக் கொண்டு செல்லும் சாத்தியங்களைக் காட்டுகிறது. தானாகவே ரிப்பேர் செய்து கொள்ளும் ஜீன்கள், பெட்ரோல் தயாரிக்கும் பாக்டீரியாக்கள், வயசாவதைத் தாமதப்படுத்தும் நவீன அம்ருத கலசம் போன்ற சாத்தியங்கள் இருப்பதாகச் சொல்கிறார்கள். இதில் எது நிகழும், எது மிகை என்பதையும் நாம் அறிய வேண்டும். இந்தப் புதிய தொழில்நுட்பம் பற்றி நீங்கள் தெரிந்து கொள்ளாவிட்டால் சதா மெகா சீரியல் அரை மயக்க நிலையிலும் நடிகைகளின் இடுப்பளவிலும்தான் ஆழ்ந்திருப்பீர்கள். உலகம் நம்மைப் புறக்கணித்துவிட்டு எங்கோ ஓடிப்போய்விடும். எனவே கலாமின் குடியரசு தின உரையின் விளைவாக நானோ டெக்னாலஜி பற்றிய ஓர் அறிமுகக் கட்டுரைத் தொடர் எழுதத் தீர்மானித்துவிட்டேன். வாசகர்கள் கொஞ்சம் நிதானமாகப் படித்தால் புரியும். இந்த விந்தை உலகில் உங்களுக்குத் தேவைப்படும் அனுமதிச் சீட்டு அறிவியல் ஆர்வம் மட்டுமே. முதலில்



**சுஜாதா**

இந்த 'நானோ' என்கிற வார்த்தையை சற்று உன்னிப்பாகப் பார்ப்போம்.

டாக்டர் ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் தமது டாக்டரேட் ஆராய்ச்சிக் கட்டுரையை அளிக்கும்போது, ஒரு சர்க்கரை மாலிக்யூல் கூட்டணுவின் பரிமாணத்தை, அது தண்ணீரில் கரையும் பரிசோதனைகள் செய்து 'சுமார் ஒரு நானோ மீட்டர்' என்று அறிவித்தார். முதன்முதலாக நானோ மீட்டர் என்னும் அளவை உலகுக்கு அறிமுகமானது. நானோ மீட்டர் என்பது ஒரு மீட்டரில் நூறு கோடி பாகம். ஒரு மீட்டர் நமக்குத் தெரியும். அதை நூறுகோடி பாகமாக அல்லது



பத்தாயிரம் லட்சமாகப் பிரித்தால் ஏற்படும் நுட்பம். ஆங்கிலத்தில் ஒரு மீட்டரின் பிலியன் பகுதி. பிலியன் என்பது ஆயிரம் மிலியன். அதிநுட்பமான பரிமாணம்தான். 'அணுவினைச் சத கூறிட்ட கோணிலும் உளன்' என்று சொன்ன கம்பர்தான் முதல் நானோ டெக்னாலஜிஸ்ட். 'இந்த அதியதி நுட்ப உலகில், இன்னும் விளையாமல் நிறைய இடம் இருக்கிறது' என்றார் நோபல் பரிசு விஞ்ஞானி ஃபேய்ன்மன். 1057-ல் அவர் கலிஃபோர்னியாவில் நிகழ்த்திய இயற்பியல் தொடர்பான விரிவுரைகளுள் ஒன்றில்: 'ஒரு அணுவின் அமைப்பில் திருத்தங்கள் செய்வதற்கு இயற்கையின் விதிகளில் தடை ஏதும் இல்லை' என்றார். இந்தச் சொற்பொழிவுதான் நானோ டெக்னாலஜி இயலுக்கு உந்துகோலாக இருந்திருக்கிறது.

ஒரு நானோ மீட்டர் என்பது பத்து ஹைட்ரஜன் அணுக்களைப் பக்கத்தில் பக்கத்தில் வைத்தால் கிடைக்கும் நீளம். ஒரு குண்டூசி முனையில் பத்து லட்சம் பங்கு, ஒரு பாக்டீரியாவின் ஆயிரம் பங்கு, உங்கள் மனைவியின் ரவிக்கைத் துணியைவிட நூறுகோடி பங்கு குறைவு. இந்த விந்தை உலகத்தின் விதிகளே வேறு. அன்றாடம் பெரிய பொருள்களின் இயற்பியல் விதிகளை (க்ளாசிக்கல் பிசிக்ஸ்) செவ்வியல்பியல் என்பார்கள். ஏரோப்ளேன் பறப்பது, குழாயில் ஜலம் வருவது, மாங்காய் அடித்தால் மண்டையில் விழுவது இதெல்லாம் கிளாசிக்கல்கள். இவை மூலம் ஒரு நுட்ப அளவுக்குத்தான் நிகழ்வுகளை விளக்க முடியும். 'நானோ' உலகின் விதிகள், க்வாண்டம் இயற்பியல் விதிகள் இவற்றை விளக்க புதிய முறைகள், கருவிகள் வேண்டும். அவற்றைச் சரியாக அறியும்போது வெளிப்படும் சாத்தியங்கள் மனிதனை கடவுளுக்கு அருகில் கொண்டு செல்கின்றன.

எப்படி... பார்ப்போம்!

(விந்தை தொடரும்)

**தேர்தல் தேதி அறிவிக்கப்பட்டு விட்டது. அரசியல் கட்சிகள் பிரசாரத்துக்கு ஆள் பிடிக்க ஆரம்பித்துவிட்டன. 'ஆதரவு வாய்ஸ்' என்றதும் அனைவரின் நினைவுக்கு வருவது ஸ்டார்தான்... சூப்பர் ஸ்டார்! விஜயகாந்த், கலைஞர், ஜெ. மூவரும் ஸ்டாரின் கடைக்கண் பார்வை வேண்டி அணுகினால் எப்படியிருக்கும், என்ன நடக்கும்? பிடிங்க நம்ம உடான்ஸை!**

முதலில் தே.மு.தி.க. ராமுவசந்தன், ரஜினி வீட்டுக்கு போன் போட்டு அப்பாயின்மெண்ட் கேட்கிறார். நீண்ட நெடிய இழுவைக்குப் பிறகு ரஜினி, விஜயகாந்த்தை தமது ராகவேந்திரா கல்யாண மண்டபத்துக்கு வரச் சொல்கிறார். மண்டபத்துக்குள் வரும்போதே விஜயகாந்தின் வயிறு, "அய்யோ... இந்த மண்டபம்லாம் நல்லா இருக்கே... டி.ஆர்.பாலு கண்ணுல இதெல்லாம் படாதா..." என்று அவரையும் மீறி பற்றி எரிகிறது. ஒரு பெப்சியை வாங்கி வாயில் ஊற்றி மேலும் வயிறை எரிய விட்டுக்கொண்டு ரஜினியின் அறைக்குள் நுழைகிறார்.

**ரஜினி:** வாவ்... விஜி..! ஸாரி... கேப்டன்... வாங்க... வாங்க... எப்படி இருக்கு உங்க கோக்குமாக்கு... ஸாரி... தே.மு.தி.க?

**விஜயகாந்த்:** ரொம்ப நம்பிக்கையா இருக்கேன்... அநேகமா 180 சீட்டு சாவிடா வந்துரும்... இருந்தாலும் மத்த தொகுதி மக்கள் நல்லா இருக்கணும்ல... அதான்...

**ரஜினி:** இழுக்காம சொல்லுங்க விஜி... என்னோட ஹெல்ப் எதுவும் வேணுமா...?

**விஜயகாந்த்:** ஆமாஜி... நீங்க சுஜாதா கிட்ட சொல்லி 'கலைஞர் ஜெயிச்சா கடவுளாலயும், அம்மா ஜெயிச்சா ஆண்டவனாலயும் தமிழ்நாட்டைக் காப்பாத்த முடியாது'ன்னு ஒரு பஞ்ச் டயலாக்கை சிவாஜில எனக்கு ஆதரவா எடுத்து விடணும்... அதுல தமிழ்நாடே பத்திக்கணும்... (அழுகிறார்)

**ரஜினி:** ஓ...நோ... வொய் ஆர் யு க்ரையிங் விஜி...?

**விஜயகாந்த்:** (சமாளித்துக்கொண்டு) இல்ல... என் கண்ணு எப்பவுமே அப்படித்தான்.

**ரஜினி:** ஆமா... எம்.ஜி.ஆருக்குப் பிறகு உங்களுக்குத்தான் அதிகக் கூட்டம் வருதுன்னு உங்க பார்ட்டியில யாரோ ஒருத்தர் கூவிக்கிட்டுத் திரியறாராமே... ஈஸ் இட் ட்ரூ?' (என்று ரஜினி மடக்க, பதில் சொல்ல முகமில்லாமல், துண்டால்

# வாராய் நீ ரஜினி!



மறைத்தபடி எஸ்கேப் ஆகிறார் கேப்டன்)



**அ**டுத்ததாக கலைஞர் வீட்டிலிருந்து ரஜினி வீட்டுக்கு போன் வருகிறது. ரஜினியே லைனில் வருகிறார். "ஆக்சு வலி நான் டெய்லி எம்.ஜி.ஆர். சமாதி ஏரியாவுல வாக்கிங் போவேன். ஸோ கலைஞர்ஜி அங்க வந்துட்டா பேசிடலாம்" என்று கூற, அதிகாலையில் கலைஞர் - ரஜினி சந்திப்பு. லுங்கியில் கலைஞர் வர, எதிரில் குர்தாவில் ரஜினி.

**ரஜினி:** வணக்கம் கலைஞர்ஜி. நல்லா இருக்கீங்களா... என்னவோ பேசணும்னு சொன்னீங்களாமே... சிவாஜிக்கு வசனம் எழுத சுஜாதாவைக் கமிட் பண்ணியாச்சே...

**கலைஞர்:** பாசக்கிளிகள் பறந்துபோன பின்னரும் என்னை வசனம் எழுதச் சொல்ல, எனதருமைத் தும்பி... மன்னிக்கவும்... தம்பி ரஜினி ஒன்றும் உலகம் தெரியாதவர் அல்ல என்பது எனக்குத் தெரியும்.

**ரஜினி:** கரெக்ட் ...ம்... சொல்லுங்கஜி...

**கலைஞர்:** இல்ல தம்பி.. இப்போ கேப்டனு, பைலட்டு, டிரைவருன்னு ஏகப்பட்ட பொடிப்பசங்க வந்து பாலிடிக்ஸ் பண்றானுங்க. பெரிய ரப்ச்சரா இருக்கு... இதுல வைகோ வேற குடைச்சல் கொடுத்துட்டாரு...

**ரஜினி:** எஸ்... எஸ்... திரும்பத் திரும்ப டெலிகாஸ்ட் பண்றீங்களே... பார்த்தேன்...

**கலைஞர்:** இந்த அம்மா வேற ஏகப்பட்ட விருதுகளை அள்ளி விட்டிருக்கு... சரத்தையும் நெப்போலியனையும் தவிர கிட்டத்தட்ட எல்லாரும் அந்தப் பக்கம் போயிட்டாங்க... அதான் நீங்க வந்து எனக்கு ஆதரவா தப்புந்தவறுமா... மன்னிக்கணும்... தைரியமா ஒரு அறிக்கையோ, இல்ல சிகரெட்டை ஸ்டைலா பிடிச்சுக்கிட்டு ஒரு பேட்டியோ கொடுத்தா ஒரு அள்ளு அள்ளிப் புடுவேன்...

**ரஜினி:** வெரிகுட் ஐடியா கலைஞர்ஜி... ஆனா எனக்கு ஸ்ரேயாவோட ஸ்விட்சர்லாந்துல ஒரு டூயட் இருககு... வேணும்னா மே எண்டுல ஒரு அறிக்கை அனுப்பிடட்டுமாஜி...

**கலைஞர்:** *(ரணகளமாகி)* அட... என்ன தம்பி நீங்க... உங்க அறிக்கை வர்றப்போ அந்தம்மாவே திரும்ப சீட்டுல உக்காந்துடும். சீக்கிரமா ஏதாவது பண்ண முடியுமான்னு யோசிங்க.

**ரஜினி:** ஓ ஷ்யூர்... அதுக்கு முன்னால என்கூட ஒருமுறை ஹிமாலயாஸ் ட்ரிப் வர்றீங்களாஜி... மனசுக்கு ரிலாக்ஸ்டா இருக்கும்.

**கலைஞர்:** *(ஆஹா... இந்த ஆளு பனிமலைக்கு இழுத்துக்கிட்டுப் போயி வெறச்ச கோழியாட்டம் எலக்‌ஷன் நேரத்துல அனுப்பிடுவாரு போலிருக்கே... இவரு சகவாசமே வேண்டாம் நமக்கு... என்று யோசித்தவர்)* – பை பை சிவாஜி *(என்று டாட்டா காட்டி எகிறுகிறார்.)*

**க**லைஞர் - ரஜினி சந்திப்பு குறித்து உளவுத்துறை அம்மா காதில் கிசுகிசுக்

கிறது. 'எல்லா நடிகரையும் இழுத்தாச்சு. அவரை மட்டும் எதுக்கு விட்டு வைக்கணும்' என்று ஓ.பி.எஸ். அம்மாவிடம் ஓத, அம்மா ஓ.கே சொல்ல, சந்திப்பு ஃபிக்ஸ் ஆகிறது. கேளம்பாக்கம் பண்ணை வீடு என்று தகவல் வர, அதை பம்மிப் பம்மி அம்மாவிடம் சொல்கிறார் ஓ.பி.எஸ்.

**ஜெயலலிதா:** என்னது... நான் வரணுமா... அவ்ளோ திமிர் வச்சுடுச்சா அவருக்கு... *(என்று ஓவர் டெசிபலில் அலற, அங்கிருந்த அனைவருக்கும் வியர்வை கொட்டுகிறது. சட்டென்று சுதாரித்த ஜெ)* எலக்‌ஷன் நேரமா வேற இருக்கு... இல்லாட்டி கிழிகிழின்னு கிழிச்சுடலாம்... சரி... சரி... கேளம்பாக்கம் பண்ணை வீடுதானே... சிறுதாவூர் பங்களாவுல இருந்து வர்ற வழியில பார்த்துடலாம். *(சந்திப்பு நிகழ்கிறது)*

**ரஜினி:** வாங்க மேடம்... ஸாரி.. மிஸ்.. ஹவ் ஆர் யூ?

**ஜெயலலிதா:** ம்... இருக்கேன்...

**ரஜினி:** ஓ நைஸ்... சொல்லுங்க... எனி ஹெல்ப் ஃப்ரம் மீ?

**ஜெயலலிதா:** *(பற்களை நறநறவெனக் கடித்தபடி, ஆனால் வெளியில் சிரித்தபடி)* ஆமாம்... நீங்க பிரசாரம் பண்ணணும்... பட்... எனக்கு இல்ல... கருணாநிதி கூட்டணிக்கு... *(என்று ஜெ சற்று நிறுத்த, ரஜினி ஆச்சர்யமாகப் பார்க்கிறார்)*

**ரஜினி:** என்ன சொல்றீங்க மேம்... எனக்குப் புரியல... டோட்டலி கன்ஃப்யூஸ்டு...

**ஜெயலலிதா:** பயப்படாதீங்க... போன பார்லிமெண்ட் எலக்‌ஷன்ல ராமதாஸை எதிர்க்கறேன் பேர்வழின்னு சில தொகுதிகள்ல உங்க ஆளுங்க எங்க கட்சிக்கு வோட்டுப் போட்டாங்க... இதெல்லாம் பத்தாதுன்னு மத்திய சென்னைல நீங்க வேற ரெட்டை இலைக்கு வோட்டுப் போட்டீங்க... டோட்டல் வாஷ் அவுட் ஆனோம்... அதனால தயவுசெஞ்சு இந்தத் தடவை நீங்க கருணாநிதி கூட்டணிக்கு ஆதரவா பிரசாரம் பண்ணலைன்னாலும் கூட அட்லீஸ்ட் துண்டுச் சீட்டாவது அடிச்சு அனுப்பணும்... ப்ளீஸ்... *(என்று ஜெ. ரஜினியிடம் கெஞ்ச, ரஜினி டோட்டல் மூட்அவுட் ஆகி இமயமலைக்குப் பறக்கிறார்)*

கற்பனை: **முராரி**

# கல்கி சதாசிவம் நினைவு அறக்கட்டளை



## கல்கி சதாசிவம் நினைவுச் சொற்பொழிவு;
## கல்கி சதாசிவம் நினைவு விருது
## வழங்கும் விழா

- 2005ம் ஆண்டில் தமிழ் இதழ்களில் வெளியான கலை நயமும், சமுதாய நோக்கும் இணைந்த தலைசிறந்த விளம்பரத்துக்கான விருது வழங்குதல்
- படிப்பில் சிறந்த, பொருளாதாரத்தில் பின்தங்கிய மாணவர்களுக்கு கல்வி உதவித் தொகை வழங்குதல்

*தலைமை :*

**மாண்புமிகு திரு ஜி.கே. வாசன்**

மத்திய அமைச்சர், திட்ட அமலாக்கத் துறை

*கல்கி சதாசிவம் நினைவுச் சொற்பொழிவு :*

**பாரதி : நேற்று, இன்று, நாளை**

பேருரை : **திருமதி பாரதி பாஸ்கர்**

நாள் : 18.03.2006, சனிக்கிழமை,
நேரம் : மாலை 6 மணி
இடம் : பாரதிய வித்யாபவன் அரங்கம்
மயிலாப்பூர், சென்னை - 600 004

---

***அனைவரும் வருக!***

அவர்கள், பணத்துடன் வந்திருந்தனர். அதிகாலையிலே கிளம்பி, பஸ் பிடித்து எட்டு மணிக்கெல்லாம் கூட்டுரோடில் வந்து இறங்கிவிட்டனர்.

நிலத்தை விற்கும் பெரியசாமியும், உதவிக்கு வரும் சேகரும் வந்து சேர்ந்துவிட்டால், அடுத்த பஸ்ஸைப் பிடித்து டவுனுக்குப் போய் விடலாம்.

''ஒன்பதுக்கெல்லாம் பத்திரம் விற்கும் நாயுடு கடை திறந்திருக்கும். கணக்கு போட்டு வாங்கி, ரிஜிஸ்தராபீஸ் வாசலில் காத்திருக்கும் பத்திர எழுத்தர் யாரிடமாவது கொடுத்து எழுதி வைத்துக்கொண்டால், அலுவலகம் திறந்ததும் முதலில் போய் பதிவு செய்துகொண்டு சீக்கிரம் ஊர் திரும்பி விடலாம். அரை நாள் லீவோடு முடியும்...''

தங்களுக்குள் பேசிக்கொண்டு, அங்கிருந்த நெடும்பாறையில் உட்கார்ந்து பீடி பற்ற வைத்தார்கள்.

எட்டரை மணிவாக்கில், சேகர் மட்டும் வந்தான்.

"அவரு வர்லயா?"

''ரெடியா இருக்காரு. அவருக்கு முன்ன, அவருக்குக் கடன் கொடுத்தவங்க டவுனுக்குப் போய் காத்துக்கிட்டிருக்காங்க. சரியான நெருக்கடி. இப்ப ஒரு காரியம் பண்ணணும்...''

"என்ன?"

''நீங்க பணப்பையோடு அப்படியே திரும்பி ஊருக்குப் போயிடுங்க...''

அவர்கள் புருவம் உயர்த்தினர்.

"ஏன்?''

"காரணமாத்தான் சொல்றேன். நான் சொல்ற மாதிரி கேட்டால் பத்துலருந்து, பதினைஞ்சாயிரம் வரை லாபம் கிடைக்கும்..."

"ஏற்கெனவே குறைஞ்ச விலைக்குத் தானே பேசி முடிச்சிருக்கு..."

''இன்னும் குறைச்சு வாங்க வழி சொன்னால் கசக்குதோ...''

வந்தவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர். பிறகு, ஒப்புக்கொண்டனர். அவர்களிடம்,

"இப்போ எவ்வளவு குறைச்சு வாங்கித் தர்றனோ... அதுல மூணுல ஒரு பங்கு எனக்குத் தரணும். பதினைஞ்சாயிரத்தை மிச்சம் பண்ணிக் கொடுத்தால் ஐயாயிரம் எனக்கு. ஏற்கெனவே பேசின கமிஷன் தனி..." என்று கறாராகச் சொல்லிவிட்டு, அடுத்து எப்படி நடந்துக்கணும் என்பதையும் விவரித்தான், சேகர்.

சேகர் திரும்பி ஊருக்குள் வந்தபோது, அவனுக்காகக் காத்திருந்த பெரியசாமி, 'விருட்'டென்று திண்ணையிலிருந்து இறங்கினார்.

"போகலாமா... அவங்க பணத்தோடு வந்துட்டாங்களா...'' என்று படபடத்தார்.

"நான் கூட்டு ரோடிலருந்துதான் வர்றேன். அவங்களைக் காணலே... தேதியை மறந்து தொலைச்சிட்டாங்களா... என்னன்னு தெரியல...'' என்று கைகளைப் பிசைந்தான்.

பெரியசாமிக்கு கவலை, பயமாயிற்று.

"சேகர்... கடன்காரங்க எல்லார்க்கும் இன்னைக்கு செட்டில் பண்றேன்னு வாக்கு கொடுத்துட்டேன். அவங்கள பத்து மணிக்கு ரெஜிஸ்தராபீசுக்கு வரச் சொல்லிட்டேன். இப்போ ஆள் வராமல் போனால், பணம் கிடைக்காமல் போனால், கொடுத்த வாக்கை மீறினாப்ல ஆயிடும்... அப்புறம் நான் உயிரோடு இருக்கறதுல அர்த்தமில்லாம போயிடும்பா'' கண் கலங்கினார்.

"நேர்ல வேணா போய்ட்டு வர்றேன்..."

"நானும் வர்றேன்..."

பஸ் பிடித்து, அந்த ஊருக்குப் போய்ச் சேர்ந்தனர். இவர்களைப் பார்த்ததும் அவர்கள் சம்பிரதாயமாக வரவேற்

றனர்.

"என்ன... இங்கயே இருக்கீங்க. இன்னைக்கு பத்திரப்பதிவு வச்சிருக்கறத மறந்துட்டீங்களா..."

"தேதியொண்ணும் மறக்கல..."

"பின்னே..."

''நிலத்தைப் பாக்காம வாங்கறம்னு சொல்லிப்புட்டம். அப்புற மாத்தான் அது உவர் மண்ணு... விவசாயத்துக்கு லாயக்கில்லேனு கேள்விப்பட்டோம். அதை வாங்கி என்ன செய்யறது..."

''அபாண்டம். தம்பி... நெல்லு போட்டா,



பொன்னு காய்க்கும் பூமியப்பா. ஒரு போகம் விளைஞ்சாலும் ஒரு வருஷத்துக்குத் தாங்கும். உள்ளூர்க்காரன், நான் நீனு போட்டிலதான் இருக்கான். அவங்களுக்கு விக்கக் கூடாதுங்கற ரோஷத்துலதான் பாதி விலைக்குப் போனாலும் பரவாயில்லைன்னு அசலூர்க்காரனுக்கு விற்க முன் வந்தேன்... சேகர்... எடுத்துச் சொல்லப்பா..."

"எல்லாம் சொல்லித்தானே ஏற்பாடு பண்ணினது. குறுக்குசால் ஓட்டி குழப்பியிருக்கான் எவனோ... இதோ பாருங்க, இது விளையாட்டு சமாசாரமில்லை. இந்த

**படுதலம் சுகுமாரன்**

பேரம் தடங்கல் பட்டுப்போச்சுன்னா எனக்கும்தான் அசிங்கம். உங்களை நம்பித்தான் இதுல இறங்கினேன். ஒழுங்கு மரியாதையா வாங்கிக்கணும்..."

"என்ன... மிரட்டலா?"

"சேகர், ஆத்திரப்படாதே. என்னோட பொல்லாத நேரம்... முடிவா என்னப்பா சொல்றீங்க..."

''ஏக்கருக்கு ஐயாயிரம் குறைச்சுக் கொடுத்தால் வாங்கறோம்..."

"இது அநியாயம்..." - சீறினான் சேகர்.

"அநியாயம் ஒண்ணுமில்லை. நிலத்துக்கு நிறைய செலவழிக்க வேண்டியிருக்கு. வண்டி வண்டியா மண் அடிக்கணும். மருந்தெல்லாம் வாங்கிப் போட்டு சத்து பண்ணணும். ஒவ்வொண்ணுத்துக்கும்



"'இந்த வீட்டுல நான் இருக்கணும், அல்லது உங்க அம்மா இருக்கணும்'னு என் மனைவி சொன்னா..."

"நீ என்ன சொன்னே?"

"வேலைக்காரி இருந்தாப் போதும்னு சொல்லிட்டேன்."

- உஷாதேவி

ஊருக்கு ஓடி வரணும்... இப்பவும் பெரியவருக்காகத்தான் சம்மதிக்கறோம்..."

"சரி" என்றார் பெரியசாமி.

"என்ன சரி... அவங்க சொல்ற கணக்குப்படி ஏக்கருக்கு ஐயாயிரம் வீதம் மூணு ஏக்கருக்கு பதினஞ்சாயிரம் குறையும்..."

"என்ன பண்ண முடியும்..."

"நீங்க வாங்க. ஒரே வாரத்ல வேற ஆளைப் புடிக்கலாம். இவங்களைவிட்டால் வேற ஆளா இல்லை நாட்ல..."

"பரவால்ல சேகர். இவங்க தர்ற பணத்துல, கடன் அடைஞ்சிடும். என்ன... அந்தப் பதினஞ்சாயிரம் இருந்தால் கைக்கு ஆதரவாயிருக்கும். சரி வாங்க. புறப்படுவோம்" என்றார்.

எல்லோரும் கிளம்பி, பஸ் பிடித்து, டவுனுக்கு வந்து சேர, மத்யானமாகிவிட்டது.

பத்திரம் வாங்கி, எழுதி, ரெஜிஸ்தரார் டேபிளில் வைக்க மணி மூன்று.

அதற்கு முன்பாகவே, கடன்காரர்களுக்குப் பணம் பட்டுவாடா பண்ணி முடித்தாகிவிட்டது.

பெரியசாமி கையில் சில நூறுகள்தான் மிஞ்சின.

சேகரைப் பார்த்தார்.

"சேகர், எனக்காக நீ ரொம்ப சிரமப்பட்டுட்டே. ஒரு பிள்ளைகூட இப்படிச் செய்திருக்க மாட்டான். என் மானத்தைக் காப்பாற்ற, வெளியூரெல்லாம் தேடி அலைஞ்சு... உன் சொந்த வேலையெல்லாம் விட்டு பாடுபட்டே, வித்துக் கொடுத்ததுக்கு உனக்கு எதுனா கொடுக்கணும். என்கிட்ட அதிகம் ஒண்ணுமில்ல. இதுதான் இருக்கு... வச்சுக்க..." என்று அவன் சட்டை பாக்கெட்டில் வைத்தார்.

சேகருக்கு என்னவோ போலாகிவிட்டது.

பெரியவரின் ஸ்பரிசம்... அவனுக்குச் சிலிர்ப்பாய் இருந்தது.

அவர் சட்டையைத் தொட்டதுபோல இல்லை. அதன் வழியே நெஞ்சைத் தொட்டதுபோல இருந்தது.

கையெழுத்து போட்டுவிட்டு, பெரியவர் ஊர் திரும்பக்கூட பஸ் சார்ஜுக்குப் பணம் இருக்காது என்று அவனுக்குத் தெரியும். நிஜம் நெருப்பாய்ச் சுட்டது.

எல்லாம் இழந்துவிட்ட பெரியவரின் பரிதாப நிலைமை ஒருகணம் நிழலாட, என்ன நினைத்தானோ...

நிலம் வாங்கியவர்களிடம் போய், "கமிஷன் தொகையும், கடைசில மிச்சம் புடிச்சதிலே என் பங்குத் தொகையும் பெரியவர்கிட்ட குடுத்துத் தொலைச்சிடுங்கய்யா" என்றான்.

அவர்கள் முறுவலித்தார்கள்.

"முன்ன பேசின விலை பிரகாரமே கொடுத்துடறோம். எங்களுக்கும் மனசு உறுத்தக்கூடாது பாருங்க" என்றனர்.

மொத்தமாக இருபதாயிரம் கைக்கு வந்ததில் நெகிழ்ந்து போனார் பெரியசாமி. ○

ஆரம்பமே...

# சேன்டோனியோ

**தொ**ழில் ரீதியாக மரணத்துடன் விளையாடும் சினிமா ஸ்டண்ட் கலைஞர்களின் வாழ்க்கையை சீரியஸாகச் சொன்ன படம் 'டிஷ்யூம்'. இருநூறு அடி உயரத்திலிருந்து குதிப்பது, உடல் முழுவதும் தீ வைத்துக் கொண்டு எரிவது, டாட்டா சுமோ வாகனத்தை நூறு கிலோமீட்டர் வேகத்தில் ஓட்டிச் சென்று குறுக்கிடும் லாரியைத் தாண்டுவது என, மறுமுறை எடுக்க முடியாத செலவு பிடிக்கும் காட்சிகள் ஒருபுறம். இத்தனை அழகாக எடுக்க முடியுமா என்று சொல்லும் விதமாக சலன ஓவியங்களைப் போல உருவாக்கப்பட்டிருக்கும் பாடல் காட்சிகள் மறுபுறம் என படத்தின் மொத்த ஒளிப்பதிவு மூலம் திரும்பிப் பார்க்க வைத்திருக்கிறார் சேன்டோனியோ டேர்ஸியோ. கோவாவைச் சேர்ந்த இவர், ஒன்பது வருடங்களுக்கு முன்பு சென்னை வந்தபோது தமிழ் தெரியாதாம்.

"அப்பா, அண்ணன் இரண்டு பேரும் மரைன் இன்ஜினியர்கள். எனக்கு அது போன்ற பணிகள் பிடிக்கவில்லை. வாழ்க்கையை கிரியேட்டிவாக நாம்தான் அமைத்துக் கொள்ள வேண்டும் என்று தோன்றியபோது, இது எல்லாமே சினிமாவில் சாத்தியம் என்று தோன்றியது. ஏனென்றால் புதிய புதிய மனிதர்களைச் சந்திப்பது, புதிய புதிய இடங்களுக்குப் போவது எல்லாமே சினிமாவில் சாத்தியம். ஆனால் சினிமாவில் என்னவாகப் போகிறோம் என்று யோசித்தபோதுதான், நான் செய்து கொண்டிருந்த போட்டோகிராபி என்னை சினிமாட்டோகிராபிக்கு உந்தித் தள்ளியது.

கல்லூரிப் படிப்பை முடித்த பிறகு விளம்பர போட்டோகிராபி, இண்டஸ்ட்ரியல் போட்டோகிராபி என்று பிஸியாக



**'சே**து' படத்துக்கு என்ன நேர்ந்ததோ அதுதான் 'சித்திரம் பேசுதடி' படத்துக்கும் நேர்ந்திருக்கிறது. பாக்ஸ் ஆபீஸுக்கு வந்து விட்ட படத்தை, திரும்பவும் தியேட்டர்களுக்குத் திரும்ப வைத்து, ஒரு நல்ல படத்தைக் கொஞ்சம் காலதாமதத்தோடு காப்பாற்றி இருக்கின்றது தமிழக மீடியா.

முதல் படத்திலேயே சாதித்திருக்கும் இளைஞர், படத்தின் இயக்குனர் மிஷ்கின். சென்னையில் பிறந்து வளர்ந்த இவரது பெயரில் தமிழ் வாசனை இல்லையே!

"ரஷ்ய எழுத்தாளர் தஸ்தாயெவ்ஸ்கி எழுதிய 'இடியட்' நாவல் எனக்குள் அதிக பாதிப்புகளை நிகழ்த்திய அந்நிய இலக்கியம். அந்த நாவலில் வரும் மிஷ்கின் என்ற இளவரசன் பாத்திரம் என்னைக் கவர்ந்தது. அவன் கனவு காண்பவன், கனவுகளை நனவாக்கத் துடிப்பவன். அதுபோல எனக்கு சினிமா கனவு" என்கிறார். சினிமாவுக்குள் நுழையும்

# டேர்ஸியேோ

இருந்தாலும்... நமது படங்களுக்கு ஒரு சலனம் இல்லையே என்ற சஞ்சலம் இருந்துகொண்டே தான் இருந்தது. எனது புகைப் படங்களுக்கு 'அசைவு' தர வேண்டும் என்று முடிவு செய்தே அதன் அடுத்த கட்டமான சினிமாட்டோகிராபிக்குத் தாவினேன்.

இது எனக்குத் தொழில் கிடையாது. இது எனது வாழ்க்கை. எனது கேமராவின் வியு பைண்டர் வழியே பாத்திரங்களை மட்டும் பார்க்கவில்லை. என் வாழ்க்கையையும் பார்க்கிறேன். சசி ஒரு அர்த்தமுள்ள மனிதர். அடிப்படை மனித உணர்ச்சிகளை அதன் இயல்போடும், பலவீனங்களோடும் தமது படைப்புகளில் வெளிப்படுத்துகிற அபூர்வ இயக்குனர். அவர் நண்பராகக் கிடைத்ததால் இந்த சேன்டோனியோ உங்களோடு பேசிக் கொண்டிருக்கிறேன்" என்று நெகிழ்ந்து போகும் இவர், சசியின் அடுத்த படத்துக்கும் ஒளிப்பதிவு செய்கிறார்.

# மிஷ்கின்

முன் என்ன செய்து கொண்டிருந்தார்?

"காரைக்குடியில் எலக்ட்ரானிக்ஸ் அண்ட் கம்யூனிகேஷன் டிப்ளமோ படித்தேன். ஏனோ இயந்திரங்களோடு என்னால் பழக முடியவில்லை. படிப்பு முடிந்த கையோடு பொக்கே கடையில் வேலைக்குச் சேர்ந்தேன். வீடு வீடாக பூங்கொத்துகளை டெலிவரி செய்யும் வேலை. பூக்களைச் சுமந்து செல்வதில் உள்ள கர்வம் அனுபவித்துப் பார்த்தால்தான் புரியும். அதன் பிறகு 'லேண்ட்மார்க்' புத்தகக் கடையில் வேலைக்குச் சேர்ந்தேன். அங்கே சேல்ஸ் பாயாக இருந்து கொண்டே விலை உயர்ந்த சினிமா புத்தகங்களை எடுத்துப் படிப்பேன். அந்தச் சமயத்தில் அடிக்கடி இயக்குனர் கதிர் அங்கே வருவார். அவரிடம் உலக சினிமா பற்றி பேசுவேன். எனது ஆர்வத்தைப் புரிந்து கொண்டு உதவியாளராகச் சேர்த்துக் கொண்டார். பின்னர் வின்சென்ட் செல்வாவிடமும் பயிற்சி பெற்றேன். இதுதான் நான் கனவுகளை விற்க வந்த கதை" என்று கவித்துமாகப் பேசும் மிஷ்கின், கதிர், வின்சென்ட் செல்வா இவர்களின் பாதிப்போ, சாயலோ இல்லாமல் படமெடுத்த ரசாயனம் எப்படி நிகழ்ந்தது?

"படம் தொடங்கி முதல் பத்து நிமிடத்தில் ஒரு குத்துப்பாட்டு, இருபதாவது நிமிடம் ஒரு காட்டுமிராண்டி சண்டைக்காட்சி என்கிற ரீதியில் படமெடுக்க எனக்கு விருப்பமில்லை. எனக்கான திரைமொழியை முதல் படத்திலேயே உருவாக்கிக் காட்டினால்தான் தனித்துத் தெரிய முடியும் என்பதில் உறுதியாக இருந்தேன். பெருங்கூட்டத்தில் ஒருவனாகத் தொலைந்துபோவதில் விருப்பமில்லை. எனது உழைப்பு... எனது டீமின் உழைப்பை காலத்தே அங்கீகரித்த, பத்திரிகை, தொலைக்காட்சி ஊடகங்களுக்குத் தலை வணங்குகிறேன்" என்று சொல்கிறார் மிஷ்கினாக அவதாரம் எடுத்திருக்கும் ராஜா.

- ஸ்ரீ

அசத்தல்!

"காஞ்சிபுரத்தில் 84-ம் வருடம் கம்ப்யூட்டரில் டிப்ளமோ பயின்றுவிட்டு, அடுத்ததாக சென்னையில் நான்கு வருடங்கள் கணிப்பொறியாளராக வேலை பார்த்தேன். நளபாகக் கலை எங்களது பரம்பரைத் தொழில். எனவே எனக்கும் கணிப்பொறியியலை விடவும் கூட்டுப் பொரியல் மீது தான் நாட்டம் அதிகமாக இருந்தது. சென்னை மைலாப்பூர் கிழக்கு மாட வீதியில் சிறிய அளவில் சிர் பட்சணங்களான அப்பளம், வடாம், முறுக்கு விற்பனை செய்யும் கடை ஒன்றை

# "இழந்த சுகங்கள் நிறைய!"

ஆரம்பித்தேன். அப்போது நானும் என் மனைவியும் மட்டுமே கடையைக் கவனித்துக் கொண்டோம்..." என்று சுவாரஸ்யமாகக் கதை சொல்ல ஆரம்பிக்கிறார் 'சுபம் மேரேஜ் சர்வீஸ்' நிறுவனரான சுபம் கணேசன். சமீபத்தில் கோலாகலமாக நடைபெற்ற மங்கையர் மலரின் வெள்ளி விழாவுக்குத் திரண்டிருந்த மூவாயிரத்துக்கும் அதிகமான வாசகர்களின் நாவுக்கு, உணவு உபசரிப்பு செய்து அனைவரின் பாராட்டுகளையும் அள்ளியவர் இவர்.

"காஞ்சிபுரத்தில் என் குடும்பம் சிர் பட்சணங்களைத் தயாரிக்கும் வியாபாரத்தில் நீண்ட நாட்களாக ஈடுபட்டிருந்தது. என் மாமா அப்பண்ணா அய்யங்கார்தான் என்னுடைய சமையல் குரு. அடுத்த தலைமுறையாவது வேறு தொழிலில் ஈடுபட வேண்டும் என்கிற குடும்பத்தினரின் ஆசையை நிராசையாக்கி, நானும் இந்தத் தொழிலில் முழு மூச்சாக இறங்க க்ரியா ஊக்கியாக இருந்தவர். ஆரம்பத்தில் சிறிய விழாக்களின் கேட்டரிங் ஆர்டர்கள் கிடைத்தன. ஆட்களை அன்று ஒருநாள் மட்டும் வாடகைக்கு அமர்த்தி, கிடைக்கும் வாய்ப்புகளைப் பயன்படுத்திக் கொண்டேன்.

ஒவ்வொரு நாளும் தினுசு தினுசான உணவுகளை எதிர்பார்க்கக்கூடியது மனிதனின் நாக்கு. கால ஓட்டத்தோடு நம்மை இணைத்துக் கொள்ளாவிட்டால் நாம் ரேஸில் பின்தங்கி விடுவோம். 96-ம் வருடத்திலிருந்து நாங்கள் மக்கள் மனத்தில் நிலைக்க ஆரம்பித்தோம். நளபாக ஜாம்பவான்கள் வீற்றிருக்கும் இடம் மைலாப்பூர். இவர்களோடு போட்டியிட்டு குறுகிய காலத்தில் எண்ணூறு திருமணங்களுக்கு சமையல் மற்றும் திருமணத்துக்குத் தேவையான அத்தனை அலங்கார வசதிகளையும் ஏற்படுத்தித் தந்து ஒரு நல்ல நிலைமைக்கு வந்துள்ளோம்.

கேட்டரிங் என்பது கிட்டத்தட்ட ஈவண்ட் மேனேஜ்மெண்ட் மாதிரிதான். எங்கெங்கு பொருட்கள்

## 'சுபம்' கணேசன்




வாங்குவது, எவ்வாறு முறையாக உபசரிப்பது போன்றவற்றைத் தீர்மானிப்பதற்காக PERT சார்ட் எனப்படும் அறிவியல் முறையைக் கையாளுவோம். இந்த நேர்த்தியால் எங்களால் பத்துத் திருமணங்களைக்கூட ஒரே சமயத்தில் கையாள முடியும். ஆனாலும் நாங்கள் ஒரு முகூர்த்தத்துக்கு நான்கு திருமணங்களுக்கு மேல் ஒப்புக் கொள்வதில்லை. நான் எவ்வளவோ திருமணங்களை நடத்தி வைத்தாலும் என் உறவினர்களின் திருமணத்துக்கு மட்டும் என்னால் செல்ல முடிவதில்லை. அன்றுதான் என் கையில் நான்கு ஆர்டர்கள் இருக்கும். இதுபோல இத் தொழிலில் இழந்த சுகங்கள் நிறைய உண்டு.

இன்றைக்கு பிட்சா, ஜங்க் ஃபுட்களுக்கு மத்தியில் நம் பாரம்பரிய உணவுகளை ரொம்பவே இழந்திருக்கிறோம். மிளகு, ஜீரகம் போன்ற ஜீரண சக்தி பொருட்களைக் கொண்டு செய்யும் அரிசி உப்புமா, அரிசி, துவரம்பருப்பு, மிளகு, ஜீரகம் கலந்து பண்ணும் பிடிக்கொழுக்கட்டை, கல்கண்டு பாத், சூரத் காரி மற்றும் மிளகு வத்தக் குழம்பு போன்ற, உணவே மருந்தாகச் செயல்படும் நம் பொக்கிஷங்களைத் தொலைத்து வருகிறோம். இளைய தலைமுறைக்கு இவையெல்லாம் தெரிவதேயில்லை. அடுத்ததாக என் திட்டம், சென்னையில் ஒரு மூன்று நட்சத்திர ஹோட்டல் ஒன்றைக் கட்டுவதுதான். நம் பாரம்பரிய தென்னிந்திய உணவுகளின் பெருமைகளைப் பறை சாற்றும் விதமாக அது அமையும்.

மேடை அலங்காரம் முதற்கொண்டு உணவு உபசரிப்பு வரை ஒரு திருமணத்தின் பாதிச் சுமையை நாங்கள் தாங்கிக் கொள்கிறோம். எல்லாவற்றையும் கச்சிதமாக முடித்து மண்டபத்தை விட்டு வெளியேறும்போது மணமக்களின் பெற்றோர் கண்களில் வெளிப்படும் நன்றி கலந்த சந்தோஷம் மட்டும் காலத்துக்கும் எங்கள் நினைவுகளை விட்டு அகலாது.''

- **ச.ந. கண்ணன்**

படங்கள்: **ஓம்**

எட்டாம் பாகம் 10

# முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

ஆளவந்தார் ஸ்தோத்திரத்தில் "முனிவரான வியாஸருக்குத் தந்தையான பராசரரை வணங்குகிறேன்" என்று ஆரம்பிக்கிறார். ஏனென்றால், பராசரரானவர் வேதத்திலே சொல்லப்பட்ட தத்துவத்தை புராண ரத்தினமான விஷ்ணு புராணத்திலே நன்கு காட்டிக் கொடுத்தார்.

அது என்ன தத்துவம்? சித் - அசித் - ஈசுவர தத்துவம் - சிதசிதீசுவர தத்துவம். தத்வத்ரயம் என்று இதைச் சொல்வார்கள்.

சேதனம், அசேதனம், ஈசுவரன் என்ற இந்த மூன்று தத்துவங்களையும் விஷ்ணு புராணத்திலே அழகாக காட்டிக் கொடுக்கிறார்.

"வள்ளல் அவர் (பராசரர்). உதார: உதார குணம் படைத்தவர். அவரை வணங்குகிறேன்" என்று பராசரரை வணங்கி ஆரம்பிக்கிறார் ஆளவந்தார்.

அர்ஜுனனுடைய தேர்த்தட்டு இருக்கிறது பாருங்கள்... அதுதான் சிதசிதீசுவர தத்துவம். அதிலே சித்தும் இருக்கிறது; அசித்தும் இருக்கிறது; ஈசுவரனும் இருக்கிறான்.

சித் யார்...? - அர்ஜுனன் - அறிவை உடையவன்; அந்த ரதத்திலே பூட்டப்பட்டிருக்கிற குதிரைகள்.

அர்ஜுனன் ரதத் தட்டிலே உட்கார்ந்திருக்கிறான். அந்த ரதம் அசேதனம். - அசித்.

இரண்டையும் நிர்வாகம் பண்ணக்கூடியவன் யார்...? பகவான் கிருஷ்ணன் உட்கார்ந்திருக்கிறானே, அவன்தான். அவன்தான் ஈசுவரன்.

– இதுதான் சிதசிதீசுவர தத்துவம்.

அடுத்து பாருங்கள், நரசிம்ஹ அவதாரம் - அதுவும் சிதசிதீசுவர தத்துவம்.

பிரஹலாதன், ஹிரண்யகசிபு இரண்டு பேரும் கம்பத்துக்கு எதிரிலே நின்று கொண்டிருக்கிறார்கள். இவர்கள் இரண்டு பேரும் அறிவுடையவர்கள் - சித். அறிவில்லாதது - அசித் - கம்பம். அந்த கம்பத்திலிருந்து தோன்றியவன் பகவான் - ஈசுவரன்.

ஆகையினாலே சிதசிதீசுவர தத்துவத்தை நரசிம்ஹ அவதாரத்திலேயும் நாம் பார்க்கலாம்.

பிரதான புருஷேசுவர: என்ற நாமம் இந்த சிதசிதீசுவர தத்துவத்தைக் குறிக்கிறது.

பிரதானம் என்றால் அசித். புருஷன் என்றால் ஜீவன் (சித்) - இந்த இரண்டுக்கும் ஈசுவரன் அவன்!

'நாரசிம்ஹ வபு: ஸ்ரீமான்' என்று பின்னால் உத்தரார்த்தத்திலே வருகிறது சஹஸ்ரநாமத்தில். இவ்வாறு சிதசிதீசுவர தத்துவத்தை நாம் நரசிம்ஹ அவதாரத்திலும் பார்க்கிறோம்.

அசேதனம் இருக்கிறதே, அது ஸ்வரூபத்தில் மாறுபாடு உடையது. இன்றைக்கு இருக்கிற மாதிரி அது நாளைக்கு இருக்காது. மாறிக்



கொண்டே இருக்கும்.

ஆனால் சேதனன் இருக்கிறானே, அவன் மாறுபாடு அற்றவன். ஓர் ஆத்மாவைப் பார்த்தால் இன்னொன்றைப் பார்க்க வேண்டாம்.

கீதையில் பரமாத்மா" கேட்கிறான்: "கத்தியால் அந்த ஜீவனை வெட்ட முடியுமா? அதற்கு அகப்படமாட்டானே அவன்! ஜலத்திலே நனைக்க முடியுமா? காற்றிலே உலர்த்த முடியுமா ஜீவனை? நெருப்பிலே கொளுத்த

# குறையொன்றுமில்லை



"தம்பி...மணி என்னப்பா?"

"ஒன்பது பத்து..."

"என்ன நக்கலா? ஒன்பதா, பத்தா? சரியாச் சொல்லு!"

- ஏ.கே. நாசர்

"முடியுமா?" என்கிறான்.

ஆகையினாலே, இந்த ஜீவன் அழியாதது. அழியக் கூடியது சரீரம். ஸ்தூலமானது சரீரம்; சூக்ஷ்மமானது ஜீவன். அவயவங்களுடையது சரீரம்; அவயவங்களற்றது ஜீவன். ஜீவன் ரொம்ப நுண்ணியதானது; ரொம்பவும் சிறியது.

அறிவோ அதற்குப் பெரியதாய் அமைந்திருக்கிறது.

அப்படிப்பட்ட அந்த சேதனன், எல்லா சரீரத்துக்குள்ளேயும் விசேஷமான முறையிலே காண்பதற்குக் கிடைத்தாலும் சுவபாவத்திலே மாறுபாடு உடையது. ஒருத்தர் ரொம்ப ஞானியாக இருக்கிறார். வேறொருத்தர் அப்படி இல்லை. இந்த மாதிரி வித்தியாசங்கள் உண்டு.

எத்தனை ஜீவன்கள் பார்ப்பதற்கு ஒரே மாதிரி இருக்கின்றன! ஒரு பாட்டி தினமும் பேரக் குழந்தைக்குக் கதை சொல்கிறாள். பாட்டி இருந்து கதை சொன்னால்தான் குழந்தை தூங்கும்.

நல்ல கதைகள், பகவத் கதைகள் எல்லாம் விசேஷமாகச் சொல்வது வழக்கம். அவ்வாறு சொல்லிக் கொண்டேயிருந்தாள் பாட்டி... ஐந்தாறு கதைகள் சொல்லியாயிற்று. ஆனால் குழந்தை தூங்கமாட்டேனென்கிறது. ஹிம்சை பண்ணுகிறது. பாட்டிக்குத் தூக்கம் வந்துவிட்டது! குழந்தையோ இன்னொரு கதை சொன்னால்தான் தூங்குவேன் என்கிறது!

அப்போது அந்தப் பாட்டி ஒரு கதை ஆரம்பித்தாள்:

"ஒரு அம்பாரம் நெல் கொட்டி வைத்திருந்தது... ஒரு குருவி வந்தது. ஒரு நெல்லை எடுத்துக்கொண்டு போச்சு... இன்னொரு குருவி வந்தது... இன்னொரு நெல்லை எடுத்துக்கொண்டு போச்சு... இன்னொரு குருவி வந்தது. இன்னொரு நெல்லை எடுத்துக் கொண்டு போச்சு" என்று சொல்லி நீட்டிக்கொண்டேயிருந்தாள் கதையை!

இப்படியே அரை மணி நேரம் சொன்னாள். "எத்தனை குருவி வரும், எத்தனை நெல்லை எடுத்துக்கொண்டு போகும்...? போதும் பாட்டி!" என்று தூங்கிப் போய்விட்டது குழந்தை!

அந்த மாதிரி, சிருஷ்டியிலே ஆத்மா எத்தனை என்று கணக்கு உண்டா என்றால், கணக்கே கிடையாது! எண்ணவே முடியாது!

ஆனந்த தீர்த்தர் மத்வாச்சார்யார் மதத்திலேயும் - விசிஷ்டாத்வைதம் - எத்தனையோ ஜீவன்கள் இந்த எம்பெருமானை அடையத் தகுந்தவர்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எத்தனை என்றால், கணக்கு சொல்ல முடியுமா?

ஆகையினால் ஜீவன் அறிவை உடையவன். அப்படிப்பட்ட ஜீவனை நாம் நன்கு உணரவேண்டும். இதற்கெல்லாம் ஈசுவரனாக இருக்கக் கூடியவன் பரமாத்மா.

அசேதனத்துடைய தன்மை என்ன.. இந்த நம்முடைய சரீரம் அசேதனம். இதற்குள்ளே - சரீரத்துக்குள்ளே இருக்கிற ஜீவன் சேதனன் என்று நமக்குள்ளேயே

இதைப் பாகுபடுத்தி, இதற்குள்ளேயே ஈசுவரன் உட்கார்ந்திருக்கிறான் என்பதை உணர வேண்டும். நமது சரீரமே இவ்வாறு சிதசித்ஈசுவர தத்துவமாக அமைந்திருப்பதனாலே, ஸ்வஸ்வரூப ஞானம் (நம்மைப் பற்றிய ஞானம்) நமக்கு வேண்டும்.

அர்த்த பஞ்சகம் என்கிற சாஸ்திரம் இதை நன்கு விவரித்துச் சொல்கிறது.

*மிக்க இறை நிலையும் மெய்யா*
*உயர்நிலையும்*
*தக்க நெறியும் தடையாகி...*

என்று ஆசார்யர்கள் இதைப் பேசினார்கள்.

ஆகையினாலே, எம்பெருமானுடைய 'ப்ராப்யஸ்ய ப்ரம்மணோ ரூபம்' - அவனைக் குறித்த அறிவு நமக்கு வேண்டும். நாம் சென்று அடையக்கூடிய எம்பெருமானுடைய திவ்ய வடிவு, அவனுடைய ரூபம், குணம், இதையெல்லாம் குறித்த தெளிந்த ஞானம், பகவத் விஷயத்திலே தெளிந்த ஞானம் ஏற்பட வேண்டும்.

ப்ராப்துஸ்ச ப்ரத்யக் ஆத்மன:

பகவானைச் சென்று அடையக் கூடிய நாம் யார் என்பதையும் நாம் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும்.

ப்ராப்த்யுபாயம் - அவனை அடைவதற்கு வழி எது என்பதும் நமக்கு நன்கு தெரிந்திருக்க வேண்டும்.

ப்ராப்த்யுபாயம் பலம் - அடைந்த பிறகு ஏற்படக்கூடிய பலன் என்ன என்றும் தெரிந்திருக்க வேண்டும்.

அவனை அடைய விடாமல் தடுக்கும் தடை எது என்கிற ஞானமும் நமக்கு இருக்க வேண்டும்.

இந்த ஐந்தும் அர்த்த பஞ்சகம்.

இந்த அர்த்த பஞ்சகத்தின் மேல்தான் வேதம் நிற்கிறது. இதைத்தான் இதிஹாஸ - புராணங்கள் எல்லாமே விவரித்துக் காட்டுகின்றன. இந்த ஐந்தைக் காட்டுவதற்காகத்தான் அவையெல்லாம் தோன்றின.

ஆகையினாலே இந்த இடத்திலே, ஜீவஸ்வரூபமாகிய நாம் யார் என்று தெரிந்தால்தான் நமக்கு அந்தராத்மாவாக இருக்கும்படியான எம்பெருமானை நாம் நன்கு உணர முடியும்.

பரத சக்கரவர்த்தி என்ற சக்கரவர்த்தி பற்றித் தெரியும்.

அவர் தமக்கு ராஜ்ஜிய பாரம் ரொம்ப ஹிம்சையாக இருக்கிறது என்று முடிவு பண்ணி காட்டுக்குப் புறப்பட்டுப் போய் விட்டார். போனால் என்ன ஆயிற்று...?

ஒரு ராஜாவின் கதை இங்கே ஞாபகம் வருகிறது...

*ஒரு நாயகமாய் ஓட உலகுடனாண்டவர்*

*கரு நாய் கவர்ந்த காலன் சிதறிய பானையன்*

*பெரு நாடு காண இம்மையிலே பிச்சை தாம் கொள்வர்*

*திருநாராணன் தான் காலம் பெற சிந்தித்து உய்யும்.*

அந்த ராஜா அரண்மனையை விட்டான், மனைவியை விட்டான், தன்னுடைய குழந்தைகளை விட்டான். ராஜ்ஜியத்தை விட்டுவிட்டு புத்த மார்க்கத்திலே வெளியே ஓடி வந்து விட்டான்! வந்து காட்டிலே இருக்கிறான். அவனுக்கு ஏகமாகப் பசிக்கிறது.

**(வளரும்)**

"சார், பஸ் ஸ்டாண்டுக்கு எப்படிப் போகணும்?"

"கொஞ்ச தூரம் நடந்து போனா வரும்."

"வரும்னா நான் ஏன் சார் நடந்தே போகணும். இங்கேயே நிக்கலாமே!"

**- என்.எஸ். பாலசுப்பிரமணியம்**





# சாமிக்குத்தம்

கார்முகில்

வெயிலாய் எரிந்து
காடாய்த் தேய்ந்து
அம்மா வளர்த்த
கூடா.

அம்மா கொண்டாடிய
பக்தி.
அம்மா இருந்த
விரதம்
அம்மா ஆக்கிய
பொங்கல்

அம்மா இடித்த
மாவு
அம்மா ஏற்றிய
தீபம்.
அம்மா வேண்டிக்கொண்ட
வேண்டுதல்கள்

அம்மா போட்ட
கும்பிடுகள்

கூடாவெட்டி
ஈரல்சுட்டு
பொங்கல் படையலிட்டு
ஊர் சுற்றியானுக்குப்
பூசை காட்டும்போது
பார்த்தால்
அம்புட்டு பொம்பளைகளும்
கோயிலுக்கு வெளியே.



## கு. ஞானசம்பந்தன்



'தமிழ் சினிமா வரலாற்றில் முதன் முதலில் தமிழிலும், தெலுங்கிலும் பேசிய, பாடிய சினிமா - காளிதாஸ். வெளிவந்த ஆண்டு 1931. இதைத் தயாரித்தவர் அர்தேஷிர் இரானி என்ற பம்பாய்க்காரர். இப்படத்தின் கதாநாயகி 'சினிமா ராணி' என்று பிற்காலத்தில் பெயர் பெற்ற டி.பி. இராஜலட்சுமி.'

- ஒரு தமிழ் சினிமா வார இதழ் (1956)

10

# தூங்காதே தம்பி தூங்காதே!

சிவத்தக்காளை வீட்டுக்குள் நுழைந்த நேரம் யாரோ சத்தம்போட, வெளியே வந்த இவன் பக்கத்து வீட்டுத் திண்ணையில் ஓடிப்போய் குப்புறப் படுத்துக்கொண்டானாம். அந்தத் திண்ணை முழுவதும் குடி கொண்டிருந்த எறும்புக்கூட்டம் விடிய விடிய கடிக்க, முகம் முழுவதும் வீங்கி கோட்டான்போல வந்து சேர்ந்தான். சினிமாமணி வீட்டில் அந்த நேரத்தில் அவன் அம்மா அவனுக்குப் பால் ஆத்திக் கொடுத்துப் படக் கதையைக் கேட்டார்களாம். மணியும் கதை சொல்லி, அந்தப் படத்தின் பாடல்கள் பற்றி அம்மாவிடம் கேட்டானாம். அதற்கு அவர்கள் 'டேய் மணி, இந்தப் படத்துக்கு இசை யார் தெரியுமா? வேதாடா (தேவா அல்ல). இவர் அதிகமா இந்தி மெட்டுக்களைத்தான் பயன்படுத்துவார். அது மட்டுமில்ல 'பார்த்திபன் கனவு' படத்திலே இவர் இசையமைச்ச 'பழகும் தமிழே பார்த்திபன் மகனே' பாட்டு உனக்குத் தெரியுமே!' என்றும் கேட்டார்களாம்.

எங்கள் வயித்தெரிச்சல்களுக்கு நடுவே சினிமாமணி கதை கதையாகச் சொல்லிக் கொண்டிருந்தான்.

நான் அடுத்த பிறவியில் சினிமாமணி வீட்டில் பிறக்க வேண்டும் என்று முடிவு செய்தேன்.

''டேய், உங்களுக்கு ஒண்ணு சொல்ல மறந்துட்டேன். நம்ம ஊர்ல சினிமா எடுக்கப் போறாங்களாம். அதிலேயும் எங்க வீட்டுக்குப் பக்கத்திலே இருக்கிற பழைய பங்களாவைத்தான் வாடகைக்கு எடுக்கப் போறாங்களாம்'' என்றான் மணி உற்சாகத்தோடு.

அவன் சொன்னதுதான் தாமதம், நாங்கள், குறிப்பாக நான் ஆகாயத்தில் பறக்கத் தொடங்கினேன். அன்றிலிருந்து ஏறத்





"புதுப்படத்துக்குப் போனா க்ளைமேக்ஸ் சீனை மட்டும்தான் பார்ப்பியா... ஏன்?"

"அதான் மிச்ச ஸீனை யெல்லாம் டி.வியிலயே காட்டிடறாங்களே..."

- விஜயா ரவி

தாழ ஒரு மாதம் பல்வேறு விதமான கனவுகள்.

தற்காலத்தில் ஒரே பாட்டில் பிரபலமாகும் இயக்குனர் விக்ரமன் படக் கதாநாயகி போல, ஒரே பாட்டில் பால் கறந்து, பால்கோவா கிண்டி, ஃபைவ் ஸ்டார் ஹோட்டல் முதலாளியாகும் வீரக் கதாநாயகன் போல, நானும் ஒரே படத்தில், அதிலும் எங்கள் ஊரில் படமெடுக்க வந்த இயக்குநர் கண்களில் நான் பட, அவரும் காணாததைக் கண்டதுபோல என்னைக் கதாநாயகன் ஆக்க, அந்தப் படம் வெள்ளி விழா, சனிவிழா என்று கொண்டாட, நான் அந்த ஆண்டின் மிகச் சிறந்த நடிகனாக வெள்ளிக் கோப்பையை வாங்க மேடை ஏற...

'பளார்' என்று ஒரு அறை விழுந்தது கன்னத்தில். 'ஏழு மணி வரைக்கும் தூங்காதே என்று எத்தனை தடவை உனக்குச் சொல்லியிருக்கிறேன்' என்று கர்ஜித்தபடி என் தந்தையார் கோபமே உருவாக என் முன்னே நின்றிருந்தார்.

எனக்குச் சற்று நேரம் ஒன்றுமே புரியவில்லை. அப்படியானால் சிறந்த நடிகனாக நான் தேர்ந்தெடுக்கப்பட்டதும், அந்த வெள்ளிக் கோப்பையை நான் வாங்கப் போவதும் இவருக்குப் பிடிக்கவில்லையோ?

நான் அறை வாங்கிய நேரம் 'களுக்' என்ற சிரிப்பொலி பின்னணியில் கேட்டது. என் புகழில் பொறாமை கொண்ட என் சகோதரிகளாகத்தான் இருக்கும். இருக்கட்டும்... இவர்களை இன்று இல்லாவிட்டால் நாளை அப்பாவிடம் மாட்டிவிட்டு அடிவாங்க வைக்க வேண்டும் என்று சபதம் எடுத்துக் கொண்டேன்.

சினிமாக்காரர்கள் வர ஒரு மாதம் ஆகும் என்று கடைசியாக வந்த தகவல் உறுதியானதால், நான் சற்றுத் தெம்படைந்தேன். அதற்குள்ளாக நான் தயாராக வேண்டாமா?

**நா**ன் சினிமாவில் சேரப் போவதாக சினிமாமணியிடம் சொன்னபோது, அவன் என்னைத் தீர்க்கமாகப் பார்த்துவிட்டு என் கைகளைப் பிடித்தபடி "அப்படியெல்லாம் இப்போதே முடிவு செய்யாதே. அதற்கு நிறைய தகுதிகள் வேண்டும். ஆனால் சினிமா துறையில் ஏதாவது சாதிக்க வேண்டும் என்று முடிவு செய்து கொள்" என்றான்.

"மணி, நீயேன் சினிமாவில் நடிக்கப் போகவில்லை?" என்று ஆர்வமாய்க் கேட்டேன்.

அதற்கு அவன் வசீகரமாய்ச் சிரித்து விட்டு "அதை அப்புறம் பார்ப்போம். முதலில் நீ சினிமா நடிகர்கள் யாரையாவது நேரில் பார்த்திருக்கிறாயா?" என்று கேட்டான்.

"கனவில்கூடப் பார்த்ததில்லை" என்றேன் பரிதாபமாக.

"சரி, இன்னிக்குச் சாயங்காலம் நாம புகழ்மிக்க கதாநாயக நடிகர் ஒருத்தரைப் பார்க்கப் போறோம். அவர் நம்ம ஊரிலேதான் இருக்கார். தயாரா இரு" என்று சொல்லிவிட்டு சைக்கிளில் ஏறிக் கிளம்பிவிட்டான்.

எனக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. நம்ம ஊரில் சினிமா கதாநாயகர், அதிலும் புகழ்மிக்க கதாநாயகர் யாராக இருப்பார்?

**நா**ன் நேராக வீட்டுக்குள் ஓடி என் தாயாரைத் தேடினேன்.

"ஏன் இப்படி ஓடி வர்றே? யாராவது உன்னை விரட்டிக்கொண்டு வந்தார்களா? இல்லை அதற்குள் பசிச்சிருச்சா?'' என்று கேட்டார் அம்மா.

"அதெல்லாம் ஒண்ணும் இல்லை. உங்கிட்டே ஒரு சந்தேகம் கேட்கணும்."

''எங்கிட்டே என்ன கேட்கப் போறே? அப்பாதான் ஹால்ல ஊஞ்சல்ல படுத்திருக்கிறாரே, அவர்கிட்ட கேட்க வேண்டியதுதானே?"

"நல்லாச் சொன்ன போ... ஒளியத் தெரியாதவன் தலையாரி வீட்டில் ஒளிஞ்ச கதையா இவன் சந்தேகத்தை அவர்கிட்ட கேட்டா, அன்னிக்கு வாங்கின அறை ரெண்டா கிடைக்கும்'' என்றாள் என் மூத்த சகோதரி. சரிதான் அன்னிக்குச் சிரிச்சது இவதான்!

"நீ வாயக் கொஞ்சம் மூடு. அம்மா நான் உங்கிட்டத்தான் கேட்கணும். நீ வா தோட்டத்துக்குப் போவோம்'' என்று அவர் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு தோட்டத்துக்கு வந்தேன்.

கிணற்றடிக்கு அருகில் அழகான பவழ மல்லி மரமும் அதற்குப் பக்கத்தில் துணி துவைக்கிற கல்லும் சில தென்னை மரங்களும் உள்ள தோட்டப்பகுதி.

அம்மாவை துணி துவைக்கிற கல்லில் உட்கார வைத்துவிட்டு அருகில் இருந்த கிணற்று வட்டச் சுவரில் நான் உட்கார்ந்து கொண்டேன்.

"அதில் உட்காராதே... உள்ள விழுந்தாலும் விழுந்திடுவே" அம்மா எச்சரிக்கையாகச் சொன்னபோது நான் கவலைப்படவில்லை.

"பயப்படாதேம்மா, நான் உள்ள விழுந்தாலும் ஏறி மேலே வந்துருவேன். முந்தா நாள்கூட உள்ளே கயிற்றைப் புடிச்சு இறங்கிப் பார்த்தேன். மூணாவது கால் வைக்கிற படியில் நம்ம குருவி ரெண்டு குஞ்சு பொரிச்சுருக்கு'' என்றேன்.

''அடப்பாவி, அதுக்குள்ள ஏன் இறங்கின, உனக்குப் பைத்தியமா?''

''சர்வாதிகாரி படத்திலே எம்.ஜி.ஆர். இப்படித்தான் கயிற்றிலே கீழ இறங்கி வருவாரு, நான் பார்த்தேன். அது இருக்கட்டும், அம்மா நம்ம ஊர்ல பெரிய நடிகர், அதுவும் கதாநாயக நடிகர் ஒருத்தர் இருக்காராமே? யார் அது? நீ எனக்குச் சொல்லவே இல்லையே?'' என்றேன் படபடப்பாக.

(தொடரும்)

பார்வதி ஸ்லோகம் சொல்லிக் கொண்டிருந்தாள்.

"டீ... பாரு, நான் மொட்டை மாடிக்குப் போறேன்" என்றபடி வாசல்கதவைத் தாழிட்டுக் கொண்டு சொர்ணம் செல்கிறாள். பார்வதி மூக்குக் கண்ணாடி ஊடே பார்க்கிறாள்.

"ரஞ்சனி ரமணி க்லுப்த
ரணத் கிஸ்கணி மேகலா"

வாய் உச்சாடணம் பண்ணுகிறது. மனது தறிகெட்டு ஓடுகிறது. வருடம் ஒண்ணா... இரண்டா... சொர்ணம் இந்த ஆத்துக்கு வந்து பல வருஷங்கள் ஓடியாச்சு.

# கடவுள் நிறம் கறுப்பு!

பார்வதி நிறம் கம்மல்தான். உடம்பு ஓணான்தான். தலை முடியும் முக திருத்தமும் கூட சுமார்தான். படிப்பாவது இருந்ததோ? அதுவும் இல்லை. பார்வதி அப்பாவுக்கு கவர்ன்மெண்ட் உத்யோகம். ஊர் ஊராய் மூணு வருஷத்துக்கு ஒரு முறை பெட்டியைத் தூக்கணும். மூத்த பெண்ணான பார்வதிக்குக் கீழ் நான்கைந்து தம்பி, தங்கைகள். அதனால் பார்வதியின் படிப்பும் மூட்டை கட்டப்பட்டது. பார்வதிக்கும் அவளோட இருபத்தி ஆறு வயசுலதான் கல்யாணம் ஆச்சு. ஐம்பது வருஷத்துக்கு முன்பு இருபத்தி ஆறு வயசுல பெண்ணுக்குக் கல்யாணம் என்பது லேட் மேரேஜ்தான். இத்தனைக்கும் பார்வதியின் அப்பா பார்வதிக்கு நிறைய செய்தார்.

பார்வதிக்குக் கணவனாக, தகப்பன் இல்லாத குடும்பத்தின் மூத்த பிள்ளை. அவருக்குக் கீழ் கல்யாண வயதில் தங்கைகள், தம்பிகள், வயோதிக பாட்டி... ஒரே ஆறுதல்... பையன் அரசுப் பணியில் இருந்தான். பார்க்க நல்ல அழகாக, ஆண்மையுடன் உயரமும், நிறமும், முடியும்.. ஆயிரம் ரூபாய் வரதட்சணையும், ஐம்பது பவுன் நகையும்... ஒப்புக் கொள்ள வைத்தது.

வாழ்க்கை ஓடித்தான் போயிற்று. முதல் பிரசவம் குறைப் பிரசவமாக... அடுத்தது.... இரட்டைக் குழந்தைகள் பிறந்தவுடன் இறந்தன. கோயில் பூஜைகள், ஸ்வாமிக்கு தவனத்தால் பந்தல் போட்டு, சப்தாகம் வாசித்து... தினமும் கோயில் பள்ளியறைப் பாலை வாங்கிச் சாப்பிட்டு ஒரு வழியாக அடுத்த குழந்தை முழுசாகப் பிறந்தான். மாறி மாறிப் பிரசவம்... பார்வதி அனேகமாக பிறந்த வீட்டில் ஒன்பது மாதம் புகுந்த வீட்டில் மூணு மாதம் என்ற அளவில்தான் இருந்து வந்தாள். சென்னையும் காஞ்சிபுரமும் மிக அருகில்.



அடுத்தடுத்த வீடு போல் ஆயிற்று. வாரம் ஒரு முறை பார்வதியின் கணவர் வருவார். ஏற்கெனவே பார்வதி அழகு. அதிலும் அடுத்தடுத்த பிரசவம். இன்னும் மரப்பாச்சியாகத்தான் போனாள். பார்வதியின் கடைசித் தங்கை சொர்ணம். பெயருக்கு ஏற்றாற்போல் பொன்னை உருக்கிவிட்ட நிறம். அதுவே பார்வதியின் அகத்துக்காரரை அடிக்கடி காஞ்சிபுரம் அழைத்தது. "அத்திம்பேர் அத்திம்பேர்" என்று

அவளும் சுத்தி சுத்தித்தான் வந்தாள். இதனாலேயே ஸ்கூல் ஃபைனல் பரீட்சை ஃபெயிலானாள். ஃபெயிலானதைத் திருப்பி எழுத மெட்ராஸ்தான் போகணும். அத்திம்பேர் வந்து கூடக் கூட்டிக்கொண்டு போய்.. பரீட்சை எழுதலை. இரண்டு பேருக்கும் இரண்டு நாளும் இரண்டு இரவாகக் கழிந்தது. மாப்பிள்ளையை ரொம்பக் கண்டித்தால் பார்வதியை விலக்கி வைத்துவிடுவானோ என்ற பயத்தில் அறிந்தும் அறியாமல், தெரிந்தும் தெரியாமல் பார்வதியின் பெற்றோர். பஞ்சர் ஒட்டின டயர் போல் வாழ்க்கைச் சக்கரமும் அடுத்தடுத்து மூன்று குழந்தைகள் பிறந்த வரை ஓடியது. பார்வதி ஒவ்வொருமுறை குழந்தையை வயிற்றில் தாங்கும்போதும் தன் கணவனைப் பற்றித் தவறாக எல்லோரும் பேசுகிறார்கள் என்றே நம்பினாள். திடீரென்று ஒரு நாள் சொர்ணத்தை அம்மா கூட்டிக்கொண்டு வந்தாள். "பாரு... உந்தங்கை உனக்கு மோசம் பண்ணிட்டாடி.... வயத்துல வாங்கிண்டு வந்து நிக்கறா... என்ன பண்ணலாம்..." யோசனை... யோசனை... பார்வதி ஆம்படையான் பார்ப்பதோ கவர்ன்மெண்ட் உத்யோகம். இரண்டு பெண்டாட்டி சட்ட விரோதம். அபார்ஷன் என்பதும் சட்ட விரோதமாய் கருதப்பட்ட காலம். வேறு வழியின்றி சரடைக் கழுத்தில் கட்டி.... 'இவள்தான் பார்வதி... என் மனைவி....' என்று கருக்கலைப்பு பத்திரத்தில் பார்வதியின் கணவர் கையொப்பமிட்டு கருவைக் கலைச்சாச்சு.... கலைஞ்சது கரு மட்டுமா... பார்வதியின் வாழ்க்கை... நம்பிக்கை...

"நான் அத்திம்பேரை தப்புச் சொல்ல மாட்டேன் சொர்ணம். இன்னொருத்தி கணவனுக்கு அதுவும் சொந்த அக்காவுக்கு துரோகம் நினைச்சியே... நன்னா இரு...



செல்லம் ராஜு



"எங்க கூட்டணிக்கு வர ஐந்நூறு கோடி ரூபாயும் ஒரு வார அவகாசமும் ஏன் கேட்கறீங்க?"
"தொகை சரியா இருக்கான்னு எண்ணிப் பார்க்கிறதுக்குத்தான்!"
- லீலாஜி

நான் அசடு தான்... அழகில்லாதவதான்..."

எத்தனை நாள், எத்தனை மாதங்கள் அழுகை... அப்பவும் பாரு கணவனைக் கோபித்துக்கொண்டது கிடையாது. பாருவின் அம்மா அன்றைய தினத்துக்குப்பின் சொர்ணத்திடம் இறுதி மூச்சு பிரியும்வரை பேசவில்லை. அப்பாதான் பாவம்...

"பார்வதி... இங்க வாம்மா... குழந்தே... சரிபண்ண முடியாத.. மன்னிக்க முடியாத காரியத்தை சொர்ணம் பண்ணிட்டா. கோபிச்சுண்டு இனி ஆகப்போறது என்னம்மா? நீ மறுத்தாலும் அவா இரண்டு பேரும் ஆத்துக்கு வெளில சுத்தினா அது நமக்கு அசிங்கந்தானே... இல்லை கோபிச்சுண்டு வராமலே இருந்துட்டாலும் நஷ்டம் உனக்குத்தானே? உனக்கும் மூணு குழந்தையாச்சு. பேசாம உன் கூடவே வெச்சுக்கோ. நானும் இருக்கேன். அவா இரண்டு பேர்கிட்டயும் சத்தியம் வாங்கிக்கோ. சொர்ணம் குழந்தை பெத்துக்கக் கூடாதுன்னு. சரியாம்மா..." ஆதரவாக... நிதர்சனத்தை உணர்ந்து பேசிய அப்பா... அப்பாவுக்குச் செய்து கொடுத்த சத்தியம் காப்பாற்றப்பட்டது. ஆனால் மோகமும் காதலும் சொர்ணத்திடம்தான் என்பது தெரிந்தது. குழந்தைகளிடம் அளவுக்கதிகமாக அன்புகாட்டி தன்பால் ஈர்த்துக் கொண்டாள். வரவு செலவு எல்லாம் தனக்குத்தான் தெரியுமென்று நடத்தினாள். பார்வதி தன் கணவனிடம் தனக்குள்ள உரிமையை நிலைநாட்டும் பொருட்டு மீண்டும் மீண்டும் குழந்தைகள் பெற்றுக்கொண்டாள். பார்வதியின் பிரசவ கால ஓய்வு சொர்ணத்துக்கும் அவள் கணவருக்கும் ஆனந்தத்தை அள்ளி வழங்கியது.

"உனக்கு வெளிப் பழக்கமெல்லாம் பத்தாது" என்று பாரு ஓரங்கட்டப்பட, கடைவீதி முதல் கோயில் வரை சொர்ணமே மனைவியாக அறியப்பட்டாள்.

ஆச்சு... தத்திப் பித்தி குழந்தைகள் படிச்சு... வேலையாகி... கல்யாணமும் வந்தாச்சு. பாரு, அடிக்கடி கடவுளிடம் மருகுவாள்.

"என்னை மட்டும் ஏன் அழகின்றிப் படைத்தாய்? ஏன் நான் மட்டும் கறுப்பாய்..."

திடீரென்று சொர்ணத்திற்கு சர்க்கரை வியாதி இருக்குமோ என்று சோதனை செய்து கொண்டு வந்தார்கள். சர்க்கரை உச்சமாய் இருக்கிறதாம். இருக்காதா பின்னே? அத்திம்பேரைக் கேட்டால் உடம்பு முழுசுமே சர்க்கரை என்பார். டாக்டர் மருந்து கொடுத்தார்கள். ஏதோ ஒரு மருந்து எதிர்வினையாற்ற சொர்ணத்தின் பொன் உடம்பில் அங்கங்கே வெண் திட்டுகள். முகம், உதடு... கைகள்... சொர்ணம் வேறு வேறு மருந்து சாப்பிட்டாள். வெண் திட்டு படரத்தான் செய்தன. தினமும் மருந்து சாப்பிட்டு காலை வெயிலில் நின்றால் சரியாகும் என்று மருத்துவர்கள் அறிவுறுத்த அதன்படி தினமும் மொட்டை மாடியில் நிற்கிறாள் சொர்ணம்.

என்னது... இது... பழக்க தோஷத்தால் லலிதா சகஸ்ரநாமமும் முடிந்து பஜ கோவிந்தத்தில் உதடுகள்.

"மாகுரு தனஜனயௌவன கர்வம்..."

பார்வதி இப்போதெல்லாம் இறைவனிடம் மருகுவதில்லை, மாறாக உருகுகிறாள்.

இசை மழலையாக அறிமுகமான ஹரிசரண், இன்று 'காதல்' படப்பாடல்கள் மூலம் பிரபலமான 'டீன்ஏஜ்' இளைஞர். ஆனால், அவர் சினிமாவையே சார்ந்திராமல் முறையாக கர்நாடக இசைப் பயிற்சியுடன் கச்சேரிகள் பல செய்து வருவது ஆறுதலான விஷயம்.

அனந்த பத்மநாபசுவாமி கோயிலில் அவர் பாடிய 90 நிமிஷக் கச்சேரியில் இனிமையும், இளமையும் நிறையவே சாஸ்திரீய சங்கீதத்துடன் சேதாரமின்றிக் கலந்திருந்தன. குரலில் பாவம் ததும்புகிறது. அவர் பாடிய அழகான ஆபோகியும் ('ஸ்ரீ லக்ஷ்மி வராஹம்'), அழுத்தமான சங்கராபரணமும் ஹரிசரணின் ஒளிமயமான எதிர்காலத்தைக் காட்டின.



* அதட்டும் மீட்டுகள்!

## மீட்டலில் அதட்டல்!

டி.என். சேஷகோபாலனுக்கு வித்தை தெரிந்த அளவு தைரியமும் அதிகம். அதனால்தானோ என்னவோ அவர் குரல் பேசும் அளவுக்கு விரல் பேசாவிட்டாலும், விடாப்பிடியாக வீணைக் கச்சேரிகள் செய்கிறார்.

'ஹம்சத்வனி' சபாவில் அவர் கையாண்ட உருப்படிகள் எல்லாமே தேர்ந்த சாகித்யங்கள்தான். 'நின்னுக்கோரி' மோகன வர்ணத்துடன் தொடங்கியவர், அதற்கு உள்ள சிட்டை ஸ்வரங்களைத் தாண்டி முழு நீள கல்பனாஸ்வரங்களால் அலங்கரித்தார்.

* பராக்! பராக்!



# ஹரிசரண் பராக்!

ஆலாபனை (ஆனந்த பைரவி சற்று மென்மையாய் அமைந்திருந்தது), நிரவல், ஸ்வரங்கள் எல்லாம் சம்பிரதாயமாக இடம் பெற்றிருந்தன. வீணை சந்தேகமில்லாமல் கஷ்டமான வாத்தியம்தான். இதில் சௌக்யத்தையும், தொடர்ச்சியையும் (continuity) கொண்டு வருவது மிகச் சிரமமான காரியங்கள். டி.என்.எஸ்.ஸின் வீணை இசையில் இவை இசைவாக அமையவில்லை. நீரோட்டமாக இருக்க வேண்டிய சாகித்யங்கள் வெட்டி, வெட்டி நகர்ந்தன. மீட்டலிலும் அவ்வப்போது அதட்டல் தலைகாட்டியது. இதில் சுகத்தையும், சௌக்யத்தையும் எங்கு தேட?

## சாதனைப் பண்பு!

சுதா ரகுநாதனின் 'சமுதாயா ஃபௌண்டேஷன்' பல நல்ல காரியங்களுக்குக் கைகொடுத்து உதவியிருக்கிறது. அவர்களுடைய சமீப சாதனை கேன்ஸர் இன்ஸ்டிடியூட் டாக்டர் சாந்தாவுக்கு 'சாதனா' விருது வழங்கிக் கௌரவித்து, பத்து லட்ச ரூபாய்க்கான காசோலையை நிறுவனத்தின் பணிகளுக்காக வழங்கியது. டாக்டர் சாந்தா மற்றும் டாக்டர் ரவிகண்ணனின் ஏற்புரை அறிவிலும், தொழிலிலும், சேவையிலும் மேம்பட்டவர்களின் பேச்சு எப்படி இருக்க வேண்டுமோ அப்படி அழகாக இருந்தது.

- ஜோதிஸ்வரூபிணி

# தொகுதி விசிட் – 8

**வீ**ச்சரிவாள் புகழ் நடிகர் நெப்போலியன்தான் வில்லிவாக்கம் தொகுதியின் சிட்டிங் எம்.எல்.ஏ. ஆசியாவிலேயே மிகப்பெரிய சட்டமன்ற தொகுதியான இங்கு, தற்போது சுமார் 11 லட்சம் வாக்காளர்கள் உள்ளனர். 65% கிராமம், 35% சிட்டி என்ற கலர்ஃபுல் கலவையான இந்தத் தொகுதியில் வில்லிவாக்கம் ஒன்றியம், அம்பத்தூர் நகராட்சி, செங்குன்றம் பேரூராட்சி, மதுரவாயல் பேரூராட்சி, போரூர், வளசரவாக்கம், திருவேற்காடு, விருகம்பாக்கம் மற்றும் சென்னை மாநகராட்சிக்கு உட்பட்ட 63, 65, 76 வார்டுகள் ஆகியவை அடங்குகின்றன.

கடந்த தேர்தலில் தி.மு.க. சார்பில் போட்டியிட்ட நெப்போலியன் 1,64,787 வாக்குகளையும், த.மா.கா சார்பில் போட்டியிட்ட செல்லக்குமார் 1,55,557 வாக்குகளையும் பெற்றனர். இவர்கள் தவிர ம.தி.மு.க. உள்ளிட்ட எட்டு வேட்பாளர்கள் களத்தில் இருந்தனர். அதிக அளவில் தொழிற்சாலைகள் இருப்பதால் வெளிமாவட்டங்களிலிருந்து வந்து இந்தத் தொகுதியில் குடியேறியவர்கள் அதிகம். இந்தத் தொகுதியில் கடைசியாக நடந்த ஆறு தேர்தல்களில் தி.மு.க., அ.தி.மு.க., காங்கிரஸ், த.மா.கா ஆகியன தலா ஒருமுறையும், மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி இரு முறையும் வெற்றி பெற்றுள்ளன.



• ஹைதர் அலி

**தொ**குதி மக்களின் செல்லப் பிள்ளைகளுள் ஒருவர் முன்னாள் எம்.எல்.ஏ.வான ஜே.சி.டி.பிரபாகர்.

"இந்தத் தொகுதியின் மிகப்பெரிய குறை என்று பார்த்தால் அரசு சார்ந்த கல்வி நிறுவனங்கள் இல்லாததுதான். அடுத்து தண்ணீர் தட்டுப்பாடு. இந்தத் தொகுதிக்குள் அம்பத்தூர் ஏரி, கொரட்டூர் ஏரி, போரூர் ஏரி ஆகியன வருகின்றன. இவற்றை முறையாகத் தூர்வாரி, மேலும் ஆழப்படுத்தினால் தண்ணீர்ப் பிரச்னை தீரும். சாலை வசதிகள் மிகவும் மோசமான நிலையில் இருக்கின்றன. குறிப்பாக கிராமப்புறப் பகுதிகள் படுமோசமாக உள்ளன" என்று கூறும் இவர், "நெப்போலியன் நல்ல மனிதராக இருந்தாலும் அவர் எதிர்கட்சி எம்.எல்.ஏ.வாக இருப்பதால் அவருக்குச் சில இடையூறுகள் இருக்கும். அதையும் மீறித்தான் பணியாற்ற முடியும்" என்கிறார்.



• நெப்போலியன்

# வீணாய்ப் போகும்



• ஜே.சி.டி. பிரபாகர்



• அபுபக்கர்



• ருக்மாங்கதன்

அம்பத்தூர் நகர்மன்றத் தலைவரான ருக்மாங்கதன், "நெப்போலியன் தன்னோட எம்.எல்.ஏ. நிதியிலிருந்து எந்த ஒரு திட்டத்துக்காகவும் அம்பத்தூர் நகராட்சிக்கு நிதி ஒதுக்கித் தரல. எம்.எல்.ஏ.ன்னா மக்களை நேர்ல சந்திச்சு அவங்களோட குறைகளைக் கேட்கணும். ஆனா இந்த நகராட்சிக்குள்ள இதுவரைக்கும் மக்களைச் சந்திக்க அவர் வந்ததே இல்ல. வெள்ளச் சேதம் ஏற்பட்ட போதுகூட இங்க வரல. நான் சேர்மனான பிறகு பாதாள சாக்கடைத் திட்டத்துக்காக அம்மாகிட்ட சொல்லி, அரசு அனுமதி வாங்கி, இப்போ அதற்கான பணிகள் நடந்துட்டு இருக்கு. அம்பத்தூர் ஏரியில 646 ஏக்கர் நிலம் இப்போ நகராட்சி வசம் வந்திருக்கு. இனிமே அதைச் சுத்தம் செய்து, பராமரித்து, அதன் மூலமா தண்ணீர்ப் பிரச்னை தீர்க்கப்படும். முக்கியமா, தெருவிளக்குகள் மற்றும் குப்பை அள்ளும் பணிகளைப் பிரித்து தனியாரிடம் தந்திருக்கோம். நல்லாவும் செய்றாங்க. அதனால தொகுதி மக்கள் ரொம்பத் திருப்தியா இருக்காங்க" என்றார்.

# வில்லிவாக்கம்!

"டிரெயினேஜ் வசதி என்பது வில்லிவாக்கம் தொகுதியின் மிகப்பெரிய பிரச்னை. உப்புத் தண்ணீரும், குண்டும் குழியுமான சாலைகளும்தான் எங்கள் தொகுதியின் சொத்துகள். இந்தத் தொகுதிக்கு என்று ஓர் அரசுப் பொது மருத்துவமனைகூட கிடையாது. இதையெல்லாம் சொல்லிச் சரிசெய்து கொள்ளலாம் என்றால், எம்.எல்.ஏ. தொகுதிப் பக்கமே வருவது இல்லை. வீட்டில் சென்று பார்க்கலாம் என்றால், 'அண்ணன் ஷூட்டிங் போயிருக்காங்க... வந்ததும் சொல்லிடறோம்'னு சொல்லி அனுப்பிடுவாங்க. மொத்தத்துல வீணாப் போகுதுங்க எங்க வில்லிவாக்கம்" என்கிறார் சேவை சங்கம் நடத்தி வருபவரான அபுபக்கர்.

ஏரியா வியாபாரியான ஹைதர் அலியிடம் பேசியபோது, "கூப்பிட்ட குரலுக்கு ஓடிவர்ற மனுஷங்க நெப்போலியன். ஏழை, பணக்காரன் வித்தியாசம் இல்லாம யார் வீட்டு விசேஷமா இருந்தாலும் கலந்துப்பாரு. இப்போ ஓரளவுக்காவது ரோடுங்க நல்லா இருக்குன்னா அதுக்கு அவர்தான் காரணம். இந்தத் தடவையும் அவர் நின்னா ஜெயிச்சுடுவாரு" என்றார்.

ம.தி.மு.க. நகரச் செயலாளராக இருப்பவர் ஐயப்பன். இவர் கடந்த தேர்தலில் போட்டியிட்டவரும் கூட. அவரிடம் பேச்சுக் கொடுத்தோம்.

"தமிழகத்தோட குறையற்ற தொகுதி



• ஐயப்பன்



• ஜி. காளன்

யாக வில்லிவாக் கத்தை மாத்தப் போறேன்னு சொன்ன நெப்போலியன், தி.மு.க. நடத்தற செயல்வீரர் கூட்டத் துல கலந்துக்க மட்டும்தான் தொகுதிக் குள்ள வந்தாரே ஒழிய, மக்களோட குறைகளைக் கேட்க தொகுதிக்குள்ள வரவே இல்ல. இந்தத் தொகுதியோட பிரச்னைகளைப் பத்தி சட்டசபையில் பேசவே இல்ல. வீராபுரம், மோரை உள்ளிட்ட கிராமப்புறப் பகுதி கள்ல அடிப்படை வசதிகள் அடிமட்டத் துல இருக்கு. இந்தத் தொகுதியில் பள்ளம் எங்க இருக்கு, தண்ணி எங்க இல்லன்னு தொகுதியில இருக்கற எங்களை மாதிரி ஆளுங்களுக்குத்தான் தெரியுமே தவிர, நெப்போலியன் மாதிரி வெளியூர் ஆளுங்களுக்குத் தெரிய வாய்ப்பில்லை. இதை ஜனங்க புரிஞ் சுக்கிட்டா சரி" என்றார்.

மதுரவாயலைச் சேர்ந்த அரசு ஊழியரான மகாலிங்கம் "எம்.எல்.ஏ. எவ்ளோ பெரிய பிரபலமா இருந்தா என் னங்க... எதிர்கட்சி ஆளுன்னா அரசாங் கம் பாரபட்சம் பார்க்கத்தான் செய்யும். ஆனா அதையும் மீறி சாலைவசதி, குடிநீர் வசதி செய்து தந்திருக்காரு நெப்போலி யன்" என்று சொல்ல, தொகுதி மக்களுக்கு நன்கு அறிமுகமான தொழிற் சங்கத் தலைவர் ஜி.காளனிடம் பேசினோம்.

"அயனம்பாக்கம், அயம்பாக்கம், திரு வேற்காடு, போரூர், அம்பத்தூர், கொரட்டூர், ஆலப்பாக்கம் ஏரிகள் முற்றிலுமாக ஆக்ரமிக்கப்பட்டிருக்கு. அதைச் சரிசெய் யாதவரைக்கும் வில்லிவாக்கத்துக்கு விடிவு கிடைக்கறது சிரமம். இங்கு தொழிற்சாலைகள் அதிகம் இருக்கறதால குடிநீர் கடுமையாக மாசு படுத்தப்பட் டிருக்கு. இதுக்காக ஒரு சிறப்புத் திட்டம் கொண்டு வரணும். இல்லைன்னா மேலும் சிரமமாயிடும்" என்றவரிடம், "எம்.எல்.ஏ..." என்று முடிப்பதற்குள், "அவ ரைப் பற்றி சொல்றதுக்கு ஒண்ணுமில்ல. ஏன்னா, அவருதான் தொகுதியையே எட்டிப் பார்க்கறதில்லையே" என்றார் சூடாக.

எஸ்டேட்டில் பணியாற்றும் இந்துமதி யிடம் பேசி பதில் வாங்குவதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது. "எங் களுக்கு என்னங்க வேணும்? கம்பெனிக் குப் போயிட்டு வர்றதுக்கு வசதியா நல்ல ரோடு வேணும். அதுவே சரியா இல்ல. ஒருவேளை ரோடு போட்டுத் தர்றேன்னு யாராவது சத்தியம் பண்ணிச் சொன்னா, அவங்களுக்கு வோட்டுப் போடலாம்னு இருக்கேன்" என்றார்.

தி.மு.க. வசம் இருக்கும் இந்தத் தொகுதியின் மீது மார்க்ஸிஸ்ட் கட்சிக்கு ஒரு கண். ஒருவேளை கிடைத்தால் சவுந்தர்ராஜன் அல்லது டபிள்யு.ஆர். வரதராஜன் நிறுத்தப்படலாம். காங்கி ரஸில் ஜே.சி.டி.பிரபாகர், செல்லக்குமார், ஐ.என்.டி.யூ.சி. செயலாளர் காளன் ஆகி யோர் முட்டி மோதுகின்றனர். அ.தி.மு.க. சார்பாக மாவட்டச் செயலாளர் மணி மற்றும் ருக்மாங்கதன் ஆகியோருக்கு வாய்ப்பு உள்ளது. தி.மு.க.வில் சம்பிரதா யத்துக்குப் பலர் பணம் கட்டியிருந்தாலும் ஏனோ உடன்பிறப்புகள் இதில் அக்கறை காட்டவில்லை.

எந்தக் கூட்டணியின் சார்பாக, எவர் நின்றாலும் திணறித் திணறித்தான் பிர சாரம் செய்து, வெற்றியோ, தோல்வியோ பெற வேண்டியிருக்கும். தொகுதியை ஒரு முறை முழுவதுமாகச் சுற்றி வரவே ஒரு மாதம் பிடிக்கும் என்கிறார்கள் அனுபவஸ் தர்கள். இது தவிர வேட்பாளர் கடுமை யாகச் செலவு செய்யவும் வேண்டியிருக்கும்.

• இரா.முத்துக்குமார்

படங்கள் : ராஜன்

**நீ** உயர்வை அடைய வேண்டுமானால் உன்னை மிகவும் தாழ்ந்தவனாகவே எப்போதும் கருது. 'நான் மேலானவன்' என்று நினைத்துத் தருக்குறாதே; சிறந்தவன் என்று எண்ணுகின்ற எண்ணத்தால் உயர்வை அடைய முடியாது. ஆதலினால் உன் மனத்தில் தாழ்மை இருக்கட்டும்.

**ப**ணிவு என்ற பண்பு உன் வாழ்க்கையின் உயிர்நாடி. பணிவு இன்றி வாழ்பவனுடைய வாழ்க்கைத் தரம் நிச்சயமாக உயர்ச்சியடையாது. அடக்கமே உன்னை அமரனாகச் செய்யும்.

**வா**ழ்வில் சுகமும் துக்கமும் சேர்ந்துதான் இருக்கும். தனியே இன்பமும், தனியே துன்பமும் இருக்க மாட்டா.

நீருள்ள இடத்தில் சேறும் இருக்கும். கடலில் குளிக்கப் போனால் அலையும் இருக்கும். ரோஜா மலர் எடுக்கப் போனால் முள்ளும் இருக்கும். நாகத்தினிடம் விஷமும் மாணிக்கமும் இருக்கும். அரிசியுடன் உமி சேர்ந்திருக்கும். பலாச்சுளையுடன் சடை போன்ற வேண்டாத பொருளும் சேர்ந்துதான் இருக்கும்.

(வாரியார் நூற்றாண்டு
1906 - 2006)



ரியார்

அமுதம்!


• ஜூஸ் பேச்சு!


• மைனஸ் தகுதி!


• 'வெஜ்' கொண்டர்!


• 'ஸாரி'பா!

● எல். மீனாட்சிசுந்தரம்,
திருவண்ணாமலை

? ஜெயலலிதா தமது ஆட்சியில் தமிழுக்காக ஏதும் செய்யவில்லை என்கிறாரே ராமதாஸ்?

! "ஐயோ ஆளை விடுங்கள்! எனக்காக யாரும் எதையும் செய்ய வேண்டாம்!" என்று தமிழ் கதறுகிற காலம் இது. தமிழை வைத்துக்கொண்டு எவ்வளவு தான் பாலிடிக்ஸ் பண்ணுவது என்பதற்கு ஒரு வரையறையே இல்லாமப் போச்சு!

● ஆர்.வஸந்தா, சென்னை - 28

? 'ஓவியர் எம்.எஃப்.ஹுசேனின் கண்களுக்கும் வலது கை கட்டை விரலுக்கும் ஒரு கிலோ தங்கம்' என்று பா.ஜ.க ஜஷுபாய் படேல் அறிவித்திருப்பது ஹுசேனின் செயலைக் காட்டிலும் நூறு மடங்கு அநாகரிகமல்லவா?

! தவறை உணர்ந்து ஹுசேன் திருத்திக் கொண்டது நாகரிகம்தானே. அது எத்தனை பேரிடம் இன்று காணக் கிடைக்கிறது?

● அ. பேச்சியப்பன்,
ராஜபாளையம் ❒

? இந்தியாவில் நூறு சதவிகிதம் வாக்குப் பதிவு நடைபெற என்ன செய்ய வேண்டும்?

! எந்த நாட்டிலும் நூறு சதவிகிதம் வாக்குப்பதிவு கிடையாது. ஆயினும் இந்திய வாக்குப் பதிவு சதவிகிதம் மெல்லக் குறைந்து வருவது கவலைக்கிடமானது. அது முன்னேற்றம் காண வேண்டுமானால், அரசியல் களம் ஆரோக்கியமாக வளர்ச்சியுற வேண்டும். சந்தர்ப்பவாத அரசியல், மக்களிடையே அவநம்பிக்கையைப் பெருக்கி வாக் களிப்பு சதவிகிதத்தை மேலும் குறைக் கவே செய்யும்.

● ஆர். ராஜதுரை, சீர்காழி

? சைவ உணவுப் பழக்கமுள்ள தமது பிரதமர், புஷ்ஷுக்கு அசைவ உணவு அளிக்கலாமா? அது சரியா?

! புஷ்ஷுக்காக மன்மோகனும் அசைவம் சாப்பிட்டிருந்தால்தான் தவறு. அதைப் பரிமாறியது விருந்தோம்பல்.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்

? சிறுசேரி சிப்காட் நிலத்தை சிங்கப்பூர் தனியார் கம்பெனிக்கு விற்பனை செய்த ஒப்பந்தத்தை தமிழக அரசு ரத்து செய்தது எதைக் காட்டுகிறது?

! எங்கப்பன் குதிருக்குள் இல்லை!

# விஜயகாந்தின்

● பூநசி மேதாவி,
கோட்டூர் ★

? நுழைவுத் தேர்வு ரத்து குறித்த தமிழக அரசின் சட்டம் செல்லாது என்று

❒ ரூ 100 பரிசு பெறுபவர்:
அ. பேச்சியப்பன்,
142, சங்கரபாண்டியபுரம் தெரு,
ராஜபாளையம்

★ ரூ 50 பரிசு பெறுபவர்:
பூநசி மேதாவி,
கெட்வெல் டயக்னாஸ்டிக்ஸ்,
59/33, பொன்னியம்மன் கோயில் தெரு,
கோட்டூர், சென்னை-600 085

உயர்நீதிமன்றம் தீர்ப்பு சொல்லி விட்டதே?

! உச்சநீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்து மாணவர்களை மேலும் தவிப்புடன் கூடிய காத்திருப்புக்கு உள்ளாக்கியிருக்கிற தமிழக அரசின் பிடிவாதத்தை என்ன சொல்ல?

● டி. முருகேசன், திருவாரூர்

? விஜயகாந்தின் 'சுதேசி' எப்படி?

! தேர்தல் நேர சினிமா லாலிபாப்தான் சுதேசி. ஆனால் ஒன்று; இன்றைய சூழலில் சுதேசி என்ற சொல் ஒன்று இருக்கிறது என்பதை ஞாபகப்படுத்தியதே பெரிய காரியம்!

● பி. சிவசக்தி, பச்சையாபுரம்

? பீஹார் சட்டசபையில் ஆளுங்கட்சி உறுப்பினரை ராப்ரி தேவி செருப்பைத் தூக்கிக் காட்டி மிரட்டியுள்ளாரே?

! கூடவே தகாத வார்த்தைகளும் பேசியுள்ளார். தகுதியற்றவர்களைப் பொது வாழ்வில் கொண்டு வந்து அமர்த்தினால் இதுபோன்ற அவலங்கள் நேரத்தான் செய்யும்.

● என். சண்முகம்,
திருவண்ணாமலை

? எஸ்.ஆர்.எம் - சத்தியபாமா பொறியியல் கல்லூரிகள், மாணவர்கள் போராட்டத்தால் திடீரென மூடப்பட்டு விட்டனவே?

! தேசிய தொழில்நுட்பக் கல்வி கவுன்ஸிலின் அங்கீகாரம் இக்கல்லூரிகளுக்குக் கிடைப்பதில் சிக்கல் என்பதால், மாணவர்களுக்குத் தாங்கள் பெறும் பட்டத்தின் மதிப்பு குறித்துச் சந்தேகம்; எதிர்காலம் பற்றிய அச்சம் விளைவு - வன்முறை; கல்லூரிகள் மூடல். தமிழக அரசு உடனடியாகத் தலையிட்டு, மாணவர்களின் அச்சத்தைப் போக்காமல் அலட்சியமாக இருப்பது அதன் வாடிக்கையான போக்கு.

● எஸ். ரவிச்சந்திரன்,
கடலூர் முதுநகர்

? துரைமுருகன் தேர்தல் ஆணையரைப் பற்றிப் பேசியபோது "நாமம் போட்டவர் வந்திருக்கார். நாங்கள் சொல்வதைச் செய்வாரோ, இல்லை நாமம் போடுவாரோ...?" எனப் பேசியுள்ளது நியாயமா?

! அநியாயம் மட்டுமல்ல; அநாகரிகமும்கூட. இதனை எதிர்த்துக் கண்டனக் குரல் கொடுத்துள்ள வைணவ மகளிர் அமைப்புக்கு வாழ்த்துகள். துரைமுருகனைக் கண்டிக்காமல் இருக்கும் கட்சித் தலைமைக்கு நமது கண்டனங்கள். ○

## தேசி எப்படி?



• லாலிபாப்!



• ஜெ. கஸ்தூரி



• வெ.சீனிவாசன்



• எஸ். பூங்கோதை

**ஜெ.வுடன் வைகோ இணைந்தது சாதகமா, பாதகமா என்று பட்டிமன்றமே நடந்து கொண்டிருக்கும் நிலையில், வைகோவின் சொந்த ஊரான கலிங்கப்பட்டிக்கு நாம் விசிட்டடித்தோம். வைகோவைப் பற்றிப் பேசினாலே கிராமத்தினர் முகத்தில் மகிழ்ச்சி பொங்குகிறது.**

# "எங்க ஊரு மவராசன் முந்திக்கிட்டாரு!

**வெ.சீனிவாசன் (எல்.ஐ.சி. முகவர்) :**

'பொடாவில் சிறைவாசம் அனுபவித்தது வைகோவின் அரசியல் வாழ்க்கையில் ஆறாத ரணமாகக் கூட அமைந்திருக்கலாம். ஆனால், தன்னுடைய சுய நலமா? அல்லது ம.தி.மு.க. தொண்டர்கள் அனைவரின் பொது நலனா? என்று எடை போடும் போது தொண்டர்களின் இதயத் துடிப்பை உணர்ந்து செயல்பட்டிருக்கிறார் வைகோ."

**ஜெ.கஸ்தூரி (கீழத் தெருவாசி) :**

போனதடவை தி.மு.க. கூட்டணியிலேருந்து ம.தி.மு.க.வை கடைசியா கழட்டி விட்டாங்க. அதனால என்னாச்சு? தனிச்சு நிக்க வேண்டியதாப் போச்சு. நல்லவேளை, இந்த முறை அப்படி ஆகலை. எங்க ஊரு மவராசன் முந்திக்கிட்டாரு.

**ஆர். முத்தாள்ராஜ், (விவசாயி) :**

வைகோ, கலைஞரோட மனப்பூர்வமாகத் தான் தோழமை கொண்டிருந்தாரு. ஆனா, தி.மு.க. ஆதரவு பத்திரிகையும், ஆதரவு தொலைக்காட்சியும் அதனை சரியாப் புரிஞ்சிக்கிடலை. வைகோ பற்றிய செய்திகளை அவுங்க அளவுக்கு வேறெந்த மீடியாவும் இருட்டடிப்பு செய்யலை. வைகோ[வி]ன் நடைப் பயணத்தை ஒளி[பரப்பாமல்] பரப்பிய காரணத்தை மையமா வெச்சு ராஜ் டீ.வி... செய்தி சேனலையே இல்... லாமப் பண்ணிட்டாங்க... நிச்சயம் இது ம.தி.மு.க... கட்சி வளர்ச்சிக்கு உகந்த முடிவு!

**ஜெயக்கொடி (அம்பேத்கார் நகர்) :**

"அவரு எப்ப எந்த முடிவு எடுத்தாலும் அது சரியாத்தான் இருக்கும். இப்பவும் பொங்கல் அன்னைக்கி எங்க காலனிக்கு வந்தார்ன்னா, நைட்டு ரெண்டு மணி வரைக்கும் எங்களோட இருந்துட்டுத் தான் வீட்டுக்குப் போவாரு. இன்னைய தேதிக்கு இப்படி ஒரு தலைவரைக் காட்டுங்க பார்ப்போம்!

**எம்.மாரித்தாய், (மேலத் தெரு):**

அ.தி.மு.க.வோட கூட்டணி வைச்சுக்கிட்டா... ருன்னதும் இப்ப அந்த டீ.வியில வைகோ இதுக்கு முன்னாடிப் பேசுனதை...

யெல்லாம் எடுத்து எடுத்துப் போடுறாங்க. இப்ப மட்டும் அவரோட முகத்தை அந்த டி.வி.யில காட்ட எப்படி முடிஞ்சது சொல்லுங்க? 42 நாள் நடைப் பயணம் போனாரே, அப்ப இந்த டி.வி. எங்கே போயிருந்துச்சு. தி.மு.க. கூட்டணியில வைகோவுக்குத் தொகுதி எத்தனைங்கறது கடைசியா ஏதோ யாசகம் கேக்குறாப்புல இல்லே ஆயிப்போச்சு. இப்ப ஜெ.வோட கூட்டணி சேர்ந்து அந்த கௌரவத்தைக் காப்பாத்திக்கிட்டாரு எங்க ஊரு வைகோ!


• ஜெயக்கொடி


• ஆர். முத்தாள்ராஜ்


• எம். மாரித்தாய்

எஸ். பூங்கோதை (கீழத்தெரு) :

''நூறு சீட் குடுத்தாலும் அ.தி.மு.கவோடு கூட்டணி வேண்டாம்ன்னு வைகோ அம்மா சொன்னதா ஒரு பத்திரிகையில பேட்டி வந்தது. அவுங்களா இப்படிச் சொல்லியிருப்பாங்கன்னு எங்க எல்லார்க்கும் ஆச்சர்யம் மட்டுமில்ல, அதிர்ச்சியாவும் இருந்துச்சு. அவுங்கள்ட்டே கொண்டு போயி காண்பிச்சோம். அந்தப் பேட்டியில வைகோ அம்மா சொல்லாத வார்த்தையெல்லாம் வந்திருக்குன்னு அவுங்க ரொம்பவே வருத்தப்பட்டாங்க. 'எந்தக் கட்சியோட கூட்டுச் சேர்றதும், கூட்டுச் சேராததும் உன்னோட விருப்பமப்பா!'ன்னுதான் அம்மா வைகோகிட்ட சொன்னதாக எங்கள்ட்ட சொன்னாங்க. இப்பவும் அவரோட விருப்பப்படிதான் அ.தி.மு.க. கூட்டணியில சேர்ந்திருக்காரு. இதுல என்ன தப்பு? சொல்லுங்க!

# -கலிங்கப்பட்டி அதிரடி

• ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



கல்கியின் புகழ் பெற்ற தலைப்பு! அறிமுக இயக்குநர் தமிழ் வாணன் கல்கிக்குக் கௌரவம் சேர்ப்பாரா மாட்டாரான்னு பயத் தோடு படம் பார்க்க உட்கார்ந்தோம். பனை மரத்துக்குக் கீழே நின்னு பாலையும் கள்ளையும் கலந்து குடிச்ச மாதிரி ஆபாச விருந்தும் மெசேஜ் மருந்தும் குழைத்துத் தந்திருக் கிறார். ஆனால் திரைக் கதையில் எந்தக் குழப் பமும் இல்லை.

அழகான பெண் களிடம் காதலிப்பதாக உருகி... அவர்களை கட்டில் வரை அழைத்து வந்து... பயன்பாட்டுக்குப் பிறகு வெட்டிக்கொண்டு ஓடி விடும் ஊதாரி இளைஞன் சத்யா, ஹரிதா என்ற பெண்ணைச் சந்திக்கிறார். ஆனால் ஹரிதா அந்த ரகம் அல்ல என்று தெரிந்து

# கள்வனின் காதலி



அதிர்ந்து போகிறார். ஹரிதாவோ தனது காதலை வீட்டில் சொல்லி திருமணத் துக்குச் சம்மதம் வாங்குகிறார். தேன் குடிக்க ஆசைப்பட்டு, தேனீ கூட்டில் கையை வைத்துவிட்ட மாதிரி திகைக் கும் சத்யா, தாம் கெட்டவன் என்ற உண்மையைச் சொல்லி விலக நினைக் கும்போது, ஹரிதா மீது உண்மையான காதல் பிறக்கிறது. ஆனால் சத்யாவின் முகமூடி பாதியிலேயே கிழிந்து போக, பிரிந்த இருவரும் மீண்டும் இணை கிறார்களா, இல்லையா என்பதைக் கொஞ்சம் புதிதாகக் காட்ட முயற்சித் திருக்கிறார் இயக்குனர்.

காதலன் சத்யாவை வீட்டுக்கு வரச் சொல்லிவிட்டு அப்பா, அண்ணன், அண்ணி, பாட்டி, குழந்தைகள் சகிதம் படபடப்போடு காத்திருக்கும் காட்சியில் கலங்க வைக்கும் நயன்தாராவுக்கு அவ ரைப் போலவே வெயிட்டான ரோல். நன்றாகவே அமைந்திருக்கிறார். யுவன்சங்கர் இசையில் 'தாஜ்மஹால் ஓவியக் காதல்' மட்டும் மனத்தில் தூரிகை வரையுது.

முகம் சுளிக்க வைக்கும் வசனங்கள், காட்சிகளை களைந்திருந்தால் எல்லோ ருக்குமான படமாய் இருந்திருக்கும்.

- லஜ்ஜாவதி

*You can*

# Win 75% Scholarship

on total course fee




## PROVE YOUR INTELLIGENCE & WIN SCHOLARSHIP

**SAT 2006** | **SCHOLARSHIP APTITUDE TEST** | **FOR DESERVING STUDENTS**

இத்தேர்வுக்கு எவ்வித கட்டணமும் கிடையாது

உங்கள் அறிவுத்திறனை நிரூபித்து வெல்லுங்கள்!




Exam Date: **APRIL 2 SUNDAY**

### ABOUT THE EXAMINATION

- No Entry fee for SAT exam.
- SAT exam question paper comprises of 25 objective type questions from General Knowledge, Science, Geography and Mathematics.
- SAT exam will be conducted in English / Tamil.
- No age bar to participate in this exam.
- Basic Qualification must be above 8th Std.

**CSC®**
**COMPUTER EDUCATION**
AN ISO 9001 : 2000 CERTIFIED INSTITUTION

SAT is conducted only once in a year - Don't miss it.

தவணைமுறை வசதியும் உண்டு

**Collect FREE admit card from your nearest CSC centres**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.